# தமிழகப் புலவர்





ஜய பாரத் பப்ளிஷிங் ஹவுஸ்
12. பிரான்ஸிஸ் ஜோசப் தெரு, சென்னை-1

# தமிழகப் புலவர்

(ஆறும் வகுப்புக்கு உரிய துணைப்பாட நூல்)

(புதிய பாடத்திட்டத்தைத் தழுவியது)

ஆசிரியர் :

வித்துவான் மா. இரா. வஞ்சிக்கோவன்

தமிழாசிரியர்

மாநகராட்சி உயர்பள்ளி, சென்னை-14

மா. இரா. தமிழரசி, M.A., B.T.



ஜய பாரத் பப்ளிஷிங் ஹவுஸ்

12, பிரான்ஸிஸ் ஜோசப் தெரு

தபாற் பெட்டி எண் 1514 : : சென்னை-1

பதிப்புரிமை ] 1966 [ விலை 80 பை.

முதற் பதிப்பு—செப்டம்பர், 1965
இரண்டாம் பதிப்பு—மே, 1966

Approved by the Madras T. B. C. for Class Use, Non-detailed Study—*Vide* R. C. No. 17, T. B. C. 66, dated 19-4-'66.

(Printed on D/C. 10·9 kg. White Printing paper).

Printed by Thompson & Co Private Ltd (Minerva Press)
33 Broadway Madras 1

55-3

Dr. M. Rajamanikkam,
M.A.,L.T., M.O.L., PH.D.
Reader in Tamil
University of Madras.

1/15, Ibrahimji Sahib First Lane,
MADRAS-1.

Date : 30-7-'65.

# முன்னுரை

"தமிழகப் புலவர்" என்னும் பெயருடன் வெளியிடப் பட்டுள்ள இத்துணைப் பாட நூல் சங்ககாலத் தமிழ்ப் புலவர் சிலருடைய வரலாறுகளைக் கூறுவதாகும். இது எளிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுள்ளது பாராட்டத் தகும். உயர்நிலைப்பள்ளி வகுப்புக்களிலும் கல்லூரி வகுப்புக் களிலும் சங்கநூற் செய்யுட்கள் கற்பிக்கப்படுகின்றன. மாணவர் அவற்றுக்கு அடிப்படையாக இப்புலவர் வரலாறு களைக் கீழ் வகுப்புக்களில் படித்தல் மிகவும் நல்லது. ஒவ் வொரு புலவர் வரலாற்றையும் தக்க தலைப்புக்களைத் தந்து எழுதியிருத்தல், மாணவர் எளிதில் அப்புலவர் வரலாறுகளை அறிதற்குப் பெருந்துணை செய்யும். இங்ஙனம் பழந்தமிழ்ச் செய்யுட்களின் கருத்துக்களைக் கோவைப்படுத்தி எளிய நடையில் எழுதியிருக்கும் ஆசிரியர் பாராட்டுக்குரியராவர். தமிழறிஞரும் இந்த நல்ல முயற்சியைப் பாராட்டுவர் என்று நம்புகிறேன்.

மா. இராசமாணிக்கனார்

# முகவுரை

இச்சிறு நூல் பழைய தமிழ்ப் புலவர் அறுவர் வரலாறுகளைச் சுருக்கமாகத் தெரிவிப்பது. இதன்கண், பிசிர் ஆந்தையார், கோவூர்கிழார், ஔவையார், பெருஞ்சித்திரனார், பெருந்தலைச் சாத்தனார், இளங்கோ அடிகள் ஆகிய அறுவர் வரலாற்றுச் சுருக்கங்கள் இடம் பெற்றுள்ளன. உயர்நிலைப்பள்ளி மாணவர்க்குத் தமிழ் இலக்கிய அறிவை ஊட்டவே இவை எளிய நடையில் எழுதப்பட்டுள்ளன. இப்பிள்ளைகள் மேல் வகுப்புக்களில் இப்புலவர்கள் பாடிய பாக்களைப் படிக்கும் வாய்ப்பைப் பெறுவர். ஆதலால் கீழ் வகுப்புக்களில் இவர்தம் வரலாறுகளை அறிவது மிகவும் நல்லது.

எங்களது இந்த முயற்சியைக் கல்வியுலகம் பாராட்டும் என்று நம்புகிறோம்.

ஆசிரியர்

# உள்ளுறை

# 1. பிசிர் ஆந்தையார்

## பாண்டிய நாடு

இன்றுள்ள மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி, கன்னியாகுமரி என்னும் மாவட்டங்கள் சேர்ந்த நிலப்பகுதி பண்டைக் காலத்தில் **பாண்டிய நாடு** என்று சொல்லப்பட்டது. அந் நாட்டில் பல மலைத் தொடர்கள் உள்ளன. அவை பழநி மலைத் தொடர், வருஷநாடு ஆண்டிப்பட்டி மலைத் தொடர், நத்தம் மலைத்தொடர், மேற்கு மலைத் தொடர் என்பன. இவை அல்லாமல் பசுமலை, யானைமலை, நாகமலை முதலிய தனி மலைகளும் சிறிய குன்றுகளும் நிரம்ப உள்ளன. மேற்குத்தொடர்ச்சி மலையில் சந்தனம், அகில், தேக்கு முதலிய மரங்கள் மிகுதியாக உண்டு. அம்மலைத் தொடரில் உள்ள காடுகளில் யானைகள் மிகுதியாகும்.

பாண்டிய நாட்டில் புகழ் பெற்ற ஆறுகள் இரண்டு உள்ளன. அவற்றுள் ஒன்று வையை; மற்றொன்று **பொருநை**. வையை ஆறு வருஷநாடு ஆண்டிப்பட்டி மலைத்தொடரில் தோன்றி மதுரையை அடுத்துப் பாய்ந்து, இராமநாதபுரம் மாவட்டத்தில் கடலோடு கலக்கின்றது. பழைய காலப் புலவர் பலர் அந்த ஆற்றைச் சிறப்பித்துப் பாடியுள்ளனர். பிற்காலப் புலவரும் அதன் சிறப்பை விளக்கியுள்ளனர். பொருநை என்பது பொதிய மலையில் தோன்றிக் கிழக்கு நோக்கிப் பாய்ந்து, கொற்கைக்கு அருகில் கடலில் கலக்கிறது. அஃது இக்காலத்தில் தாமிரவருணி என்று

சொல்லப்படுகின்றது. புலவர் பலர் இந்த ஆற்றின் சிறப்பைப் பாடியுள்ளனர். இந்த ஆற்றின் கரையில் திருநெல்வேலி, கிருஷ்ணபுரம், ஸ்ரீவைகுண்டம், ஆழ்வார் திருநகரி முதலிய தலங்கள் அமைந்துள்ளன.

பாண்டிய நாட்டின் தலைநகர் மதுரை. அந்நகரத்தில் பாண்டியன் அரண்மனையும் தமிழ்ச் சங்கமும் சிறப்புற்று இருந்தன. பல கடைத் தெருக்கள் இருந்தன. பல நாட்டுப் பொருள்கள் அக்கடைத் தெருக்களில் விற்பனை ஆயின. அரசர் தெரு, அந்தணர் தெரு, வணிகர் தெரு, வேளாளர் தெரு எனப் பல தெருக்கள் அந்நகரில் அமைந்திருந்தன. அத்தெருக்களில் உயர்ந்த மாட மாளிகைகள் அழகோடு விளங்கின. பாண்டிய நாட்டின் துறைமுகப் பட்டினம் **கொற்கை** என்பது. கொற்கையைச் சேர்ந்த கடலிலிருந்து முத்துக்களும் சங்குகளும் எடுக்கப்பட்டன. அங்கு விலைமதிப்புடைய முத்துக்கள் மிகுதியாகக் கிடைத்தன. அம்முத்துக்கள் மேல் நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டன. சங்குகளைக் கொண்டு வளையல் முதலிய பொருள்கள் செய்யப்பட்டன. கொற்கையில் முத்து எடுப்பவரும், சங்கு எடுப்பவரும் மிகப் பலராய் வாழ்ந்தனர். பல நாட்டுக் கப்பல்கள் சரக்குகளைக் கொண்டுவந்து கொற்கைத் துறைமுகத்தில் இறக்குமதி செய்தன ; அங்குக் கிடைத்த உயர்ந்த முத்துக்களையும் பாண்டிய நாட்டுப் பிற பொருள்களையும் ஏற்றிக்கொண்டு வெளிநாடுகளுக்குச் சென்றன. பழைய காலத்தில் இக்கடல் வாணிகம் மிக உயர்ந்த நிலையில் நடைபெற்றது. இதனால் கொற்கை நகரம் செல்வச் செழிப்புடன் விளங்கியது.

அக்காலத்தில் பாண்டிய மன்னர் மட்டுமே சங்கம் வைத்துத் தமிழை வளர்த்தனர். மருத்து

வர், நெல், சோளம் முதலிய தானியங்களை விற்ற வணிகர், கொல்லர், தச்சர், ஆடை வணிகர், அரசர், அரசமாதேவியர், குயத்தி, குறத்தி எனப் பலவகைப்பட்ட மக்களும் அக்காலத்தில் புலவராய் விளங்கினர். **மதுரைத் தமிழ்ச் சங்கத்தில்** புலவர் பலர் கூடித் தமிழை ஆராய்ந்தனர். பாண்டிய மன்னர் பரிசுகளை வழங்கிப் புலவர்களைச் சிறப்பித்தனர். மதுரைத் தமிழ்ச் சங்கம் ஏறத்தாழக் கி. மு. 300 முதல் கி.பி. 300 வரையில் இருந்தது என்று சொல்ல லாம். அச் சங்ககாலப் புலவருள் ஒருவரே **பிசிர் ஆந்தையார்** என்பவர்.

### பிசிர்

**பிசிர்** என்னும் ஊர் இராமநாதபுரம் மாவட்டத் தில் உள்ளது. அவ்வூரின் பெயர் இப்பொழுது 'பிசிர்க்குடி' என்று சொல்லப்படுகிறது. அவ்வூரைச் சுற்றிலும் வயல்கள் இருந்தன. அவ்வயல்கள் ஏரிப் பாய்ச்சலால் வளம் பெற்றன. ஊர் மக்கள் உழைப்பில் உயர்ந்தவர்கள். ஏரிப் பாய்ச்சலாலும் மக்கள் உழைப்பாலும் அவ்வூர் வளம் பெற்று இருந்தது. குடிகள் துன்பம் இன்றி வாழ்ந்தனர். அவ்வூரில் கல்வியாலும் ஒழுக்கத்தாலும் சிறந்த பெருமக்கள் பலர் வாழ்ந்தனர். அப்பலருள் ஒருவரே ஆந்தையாரின் தந்தையார்.

### ஆந்தையார்

ஆந்தையார் வளம் மிகுந்த குடும்பத்தில் பிறந் தவர். அவர் பிள்ளைப் பருவத்தில் திண்ணைப் பள்ளி யில் படித்தார். பின்னர் அவர் தமிழ்ப் புலவர் ஒரு வரிடம் தமிழிலக்கணம் கற்றார்; தமிழ்ச் செய்யுள் நூல்களையும் கற்றார்; செய்யுள் செய்யும் திறமை யைப் பெற்றார். அவர் வாழ்ந்த ஊரில் புலவர் சிலர் இருந்தனர். அப்புலவர்கள் அடிக்கடி மதுரைக்குச்

சென்று வருவது வழக்கம். அவர்கள் திரும்பி வந்து புலவர் பலரைப் பற்றியும், அரசர் பலரைப் பற்றியும் ஆந்தையாரிடம் கூறுவது வழக்கம்.

ஆந்தையார் காலத்தில் கோப்பெருஞ் சோழன் என்பவன் சோழ நாட்டை ஆண்டுவந்தான். அவன் அடக்கம், அன்பு, இரக்கம் முதலிய நற்பண்புகளைப் பெற்றிருந்தான். அம்மன்னன் தமிழைத் தன் உயிர் போல மதித்தான்; தமிழ்ப் புலவர் பலருக்குப் பரிசு வழங்கினான். பொத்தியார் என்ற புலவர் அவனுக்கு உயிர் நண்பர். அவ்வரசன் எப்பொழுதும் பெரியோர் பலருடன் பொழுது போக்கினான். அப்பெருமக்கள் பல நூல்களைப் படித்தவர்கள்; அறிவிலும் ஒழுக்கத்திலும் சிறந்தவர்கள். இயல்பாகவே நல்ல குணங்களைப்பெற்ற சோழன், அவர்களை விரும்பியதில் வியப்பில்லை அல்லவா?

கோப்பெருஞ் சோழன் தன் குடிமக்களை மதித்து நடந்துவந்தான்; அவர்களுக்கு வேண்டிய வசதிகளைச் செய்தான். குடிமக்கள் அவன் புகழை எங்கும் பரப்பினர். அவனிடம் பரிசு பெற்று மீண்ட புலவரும் தாம் சென்ற இடங்களில் அவன் பெருமையைப் பேசினர். பிசிர் என்னும் சிற்றூரில் வாழ்ந்த ஆந்தையாரும் அச்சோழ மன்னனது சிறப்பைக் கேள்வியுற்றார்; அவனைக் காணவும் அவனோடு நட்புக் கொள்ளவும் விரும்பினார்.

### அன்னப்பறவை

ஆந்தையார் கோப்பெருஞ் சோழனைப் பற்றி எண்ணினார்; தாம் கேள்வியுற்ற அவனுடைய சிறந்த பண்புகளைப் பலரிடமும் கூறி மகிழ்ந்தார். அவர் ஒருநாள் மாலைப் பொழுதில் தம் ஊருக்கு வெளியில் உலாவிக்கொண்டிருந்தார். அப்பொழுது ஆண் அன்னப்பறவை ஒன்று தெற்கிலிருந்து வடக்கு

நோக்கிப் பறந்து வந்தது. உடனே புலவர் கோப் பெருஞ் சோழனைப் பற்றி நினைந்தார்; அவனது தலைநகரான உறையூரைப் பற்றி எண்ணினர். அவர் மிக்க மகிழ்ச்சியோடு அந்த ஆண் அன்னப் பறவையை நோக்கிக் கீழ் வருமாறு கூறினர்:



"அன்னச் சேவலே, அன்னச் சேவலே, நீ குமரித் துறையில் அயிரை மீனை மேய்ந்து வடதிசை நோக்கி வருகின்றாய் என எண்ணுகிறேன். பாண்டிய நாட்டுக்கு வடக்கில் சோழநாடு உள்ளது. உறையூர் அந் நாட்டின் தலைநகராகும் அந்நகரத்தில் சோழனது அரண்மனை மாடமாளிகைகளுடனும் கூட கோபுரங்களுடனும் உயர்ந்து காணப்படும். நீ அந்த அரண்மனையின் மேன்மாடத்தில் தங்கு; உனது வருகையை வாயில் காப்போருக்கு அறிவிக்கத் தேவை இல்லை; ஒரு தடையும் இல்லாமல் அரண் மனையுள் நுழை; என் உள்ளம் கவர்ந்த கோப் பெருஞ்

சோழன் அங்கு இருப்பான். 'நான் பிசிர் என்னும் ஊரில் உள்ள ஆந்தையிடமிருந்து வருகிறேன்' என்று சொல். உடனே அம்மன்னர் பெருமான் உன்னை மகிழ்ச்சியுடன் வரவேற்பான்; தான் அணிந்துள்ள நகைகளுள் ஒன்றை உன் மனைவி அணியப் பரிசாகத் தருவான்''.

பழகாத நட்பு

புலவர் இக்கருத்தமைந்த பாடல் ஒன்றைப் பாடினார். அப்புலவர் சோழனை நேரில் கண்டதில்லை; அவனுடைய நல்ல குணங்களை மட்டுமே கேள்வியுற்றிருந்தார். அவர் தாம் கேள்விப்பட்டது கொண்டே அவனை உயிர் நண்பனாக மதித்தார்; அவனைப் பற்றி எண்ணி எண்ணி உருகினார்; அவனைக் கண்டு மகிழத் தவித்தார். அவனைச் சந்திக்க வாய்ப்பு ஏற்படவில்லை. அதனால் அப் பெரியார் வானத்தில் பறந்து சென்ற அன்னத்தை நோக்கிச் சோழன் புகழைப் பாடினார்.

கோப்பெருஞ் சோழன் தன்னிடம் வந்த பாண்டிய நாட்டுப் புலவர் வாயிலாக ஆந்தையாரது புலமையைப் பற்றி அறிந்தான்; அவர் தன்னைப் பாராட்டுவதையும் அறிந்தான்; அப்புலவர் பெருமானுடன் பழகி மகிழ விரும்பினான்.

ஒரு நாள் புலவர் சிலர் பிசிர் என்னும் ஊருக்கு வந்தனர்; ஆந்தையாரோடு உரையாடி மகிழ்ந்தனர். அவருள் ஒவ்வொருவரும் தமக்குப் பரிசு கொடுத்து ஆதரித்த வள்ளலைத் தம் தலைவன் என்று பாராட்டிப் பேசினர். அவருள் ஒருவர் ஆந்தையாரைப் பார்த்து, "உம்முடைய தலைவன் யார்?" என்று கேட்டார். ஆந்தையார் எந்த வள்ளலிடமும் சென்று பரிசு பெறவில்லை. ஆதலால் அவருக்கு எந்த வள்ளலும் தலைவன் அல்லன். ஆயினும் அவர்

புலவர் கேட்ட கேள்விக்குப் பின்வருமாறு பதில் கூறினர்:

"என் தலைவன் கோப்பெருஞ் சோழன் என்பவன். அவன் உறையூர் என்னும் தன் தலைநகரத்தில் வாழ்கின்றான். அவன் புலவரின் வறுமையைத் தொலைப்பவன். பொத்தியார் என்னும் புலவர் அவனுக்கு உயிர் நண்பர். அவ்வேந்தன் எப்பொழுதும் அறிஞர் நடுவில் வாழ்கின்றான்."

அறிவுடைநம்பி

ஆந்தையார் வாழ்ந்த காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டு வந்தவன் **அறிவுடைநம்பி** என்பவன்; அவன் மெய்யாகவே அறிவுடையவன். அவன் சிறந்த புலவன்; குடிகளது நன்மையில் நாட்டம் கொண்டவன்.

ஒருமுறை நிலவரி வசூலிக்கும் அலுவலர் சில ஊர்களில் குடிமக்களை வருத்தி வரியை வசூலித்தனர். ஆந்தையார் இதனைக் கேள்வியுற்றார்; பாண்டியனைக் காண விரும்பி மதுரைக்குச் சென்றார். பாண்டியன் முன்பே அவரைப்பற்றிக் கேள்வியுற்றிருந்தான்; ஆதலால் அவரை மிக்க மரியாதையுடன் வரவேற்றான். புலவர் அம்மன்னனுடன் பல செய்திகளைப் பற்றிப் பேசினர்; இறுதியில் கீழ்வருமாறு கூறினர்:

"அரசே, மிகக் குறைந்த அளவுள்ள நிலத்தில் விளையும் நெல்லை நாம் பாதுகாத்து, நாள்தோறும் அதனை அரிசியாக்கிச் சமைத்து யானைக்குக் கொடுப்பதாக வைத்துக்கொள்வோம். அந்த நெல் ஒரு யானைக்குப் பலநாட்களுக்கு உணவாகும். மிகப் பெரிய அளவுடைய நிலத்தில் மிகுந்த அளவு நெல் விளையும் அல்லவா? அந்த நெல்லை யானை, தானே புகுந்து உண்ணத் தொடங்குவதாக வைத்துக்

கொள்வோம். அது உண்பது சிறிதளவாகவும், காலால் மிதித்துப் பாழாக்குவது மிகுதியாகவும் இருக்கும். இதனை நினைவில் வைத்து நான் சொல் வதைக் கேட்க வேண்டுகிறேன்.

"அரசன் தன் நாட்டுக் குடிமக்களின் நிலைமை அறிந்து வரி வாங்க வேண்டும். அவ்வாறு வாங்கு வது அரசனுக்கும் நல்லது; குடிமக்களுக்கும் நல்லது. குடிகள் அத்தகைய அரசனுக்கு நல்லெண்ணத் தோடு தக்க சமயத்தில் மிக்க பொருள் கொடுத்து உதவி புரிவர். அரசன் இந்த நுட்பத்தை உணர வேண்டும். அவன் இதனை உணராமல், தனக்கு எப்படியும் குறித்த அளவு வரி வந்து சேரவேண்டும் என்று வற்புறுத்துவதாக வைத்துக்கொள்வோம். அவனிடம் வேலைபார்க்கும் அரசாங்க அலுவலர் அரசனை மகிழ்விப்பதற்காகக் குடிகளை வருத்தி வரி வாங்குவர். இதனால் குடிகள் தம் அரசனிடம் கொண்டுள்ள அன்பு கெடும்; குடிகளின் நல்வாழ்வும் கெடும். குடிகளின் வாழ்வு கெடின், அரசன் அடுத்த ஆண்டு அவர்களிடமிருந்து குறித்த தொகையை வரியாக வாங்க முடியாது. ஆதலால் நாடாளும் மன்னன் இந்த உண்மையை உள்ளத்தில் பதித்துக் கொள்ளவேண்டும்."

பாண்டியன் புலவர் கூறியதன் உட்கருத்தை உணர்ந்தான்; குடிமக்களின் மனம் நோகாதபடி அவர்களிடம் வரி வாங்கவேண்டும் என்று தன் அலுவலர்க்கு ஆணையிட்டான்.

### சோழன் வடக்கிருத்தல்

சோழன் தன் நாட்டை ஆண்டுவந்த பொழுது அவன் மக்கள் அரசு உரிமையைக் கைக்கொள்ள விரும்பினர். தந்தை உயிருடன் இருந்தபொழுது அவரைத் தொலைத்து அரசு உரிமையைக் கைக்

கொள்ள நினைத்தல் மிகவும் இழிவாகும். சோழன் நற்பண்புகள் நிறைந்தவன். ஆயினும் அவனுடைய மக்கள் தீய பண்புகள் நிறைந்தவராய் இருந்தனர். மக்களின் எண்ணத்தை அறிந்த மன்னன் மனம் கொதித்தான்; அவர்கள் தன்னை எதிர்க்கச் சில படைகளையும் வைத்திருந்தனர் என்பதை அறிந்தான். அவனது சினம் எல்லை கடந்தது; அவர்களை எதிர்த்துப் போர் செய்து ஒழிப்பதே நல்லது என்று எண்ணினான்.

**புல்லாற்றூர் எயிற்றியனார்** என்பவர் ஒரு புலவர். அவர் சோழனுக்கு நெருங்கிய நண்பர். அவர் மன்னனது மனக்கருத்தை அறிந்தார்; அவனை நோக்கி, "அரசே, உனக்கு மாறாக எழுந்து கிளர்ச்சி செய்பவர் சோழ பாண்டியர் அல்லர்; நின் மக்களே ஆவர். உனக்குப் பின்பு இந்த அரசு உரிமை அவருக்கே உரியது. இதனை நீயும் நன்றாக அறிவாய். நீ அவர்களைப் போரில் வென்றாலும் அரசு உரிமை உனக்குப் பின்பு அவர்களைத்தானே சேரும். நீ அவர்களுக்குத் தோற்றால் உன் பெருமை சிறுமை அடையுமே! ஆதலால் உனது பகைமைக் குணம் ஒழிக, நீ மறு உலகில் இன்பம் தரத்தக்க நல்வினையைச் செய்வாயாக," என்று அறிவுரை கூறினார்.

புலவரது அறிவுரை பசுமரத்தில் அறையப்பட்ட ஆணிபோல அரசனது உள்ளத்தில் நன்கு பதிந்தது. அவன் அரசுரிமையை வெறுத்தான்; தனது பெரும் செல்வத்தை வெறுத்தான்; உடனே தவக்கோலம் பூண்டான்; தன் தலைநகரை அடுத்திருந்த சிறு தீவில் ஒரு மர நிழலில் வடக்கு நோக்கி அமர்ந்து உண்ணாநோன்பை மேற்கொண்டான். அவனோடு நெருங்கிப் பழகிய பெரியோர் சிலரும் புலவர் பலரும் அவனைச் சூழ்ந்து அமர்ந்தனர்.

அப்பொழுது அரசன் தன்னைச் சூழ இருந்த வரை நோக்கினான்; "ஆந்தையார் பாண்டிய நாட்டைச் சேர்ந்தவர்; பிசிர் என்னும் ஊரினர். அவர் எனது நிலையை உணர்ந்து சிறிது நேரத்தில் இங்கு வருவார்," என்று கூறினான். அது கேட்ட பெரியோர், "அரசே, அவர் உன்னைப் பார்த்ததில்லை; உன் பெயரை மட்டுமே கேட்டிருப்பார். பல காலம் நன்கு பழகிய நண்பர்களும் இப்படி வருவது அருமையாகுமே!" என்று சொல்லினர்.

வேந்தன் நகைத்து, "பெரியீர், நானும் அவரை நேரில் பார்த்ததில்லை; அவா நற்பண்புகள் நிறைந்த பெரியவர் என்று கேள்விப்பட்டேன். அதுமுதல் அவரை உற்ற நண்பனாய் மதித்து வருகிறேன். அவர் என்மீது தம் உயிரையே வைத்துள்ளார் என்பதைப் பலர் கூறக்கேட்டிருக்கிறேன். சிலர் ஒருவனிடம் செல்வம் உள்ள காலத்தில் மட்டும் நட்புக்கொள்வர்; அவனது செல்வம் மறைந்தவுடன் அவனை விட்டு நீங்கிவிடுவர். ஆந்தையார் அவர்களைப் போன்ற நண்பர் அல்லர். அவர் என்னைத் தம் உயிராக மதிப்பவர்; நான் வேறு—தாம் வேறு என்பதை எண்ணாதவர். ஆதலால் அவர் மனவுணர்ச்சியால் தூண்டப்பட்டு இங்கு வருவார். என் கூற்று உண்மை என்பதை நீங்கள் விரைவில் உணர்வீர்கள். அவரும் என்னோடு வடக்கிருந்து உயிா துறப்பார். ஆதலால் அவருக்கு உரிய இடத்தை ஒழித்து வையுங்கள்," என்று கூறினான். அதுகேட்ட பெருமக்கள் மிகுந்த வியப்பு அடைந்தனர்.

### ஆந்தையார் வருகை

"நம் அரசன் சோழ நாட்டில் உள்ளவன். ஆந்தையாரோ பாண்டிய நாட்டில் இருப்பவர். அப்புலவர் இவன் இங்கு வடக்கிருத்தலை எவ்வாறு அறிவார்? அவர் இங்கு வருவார் என்று அரசன்

மிக்க உறுதியுடன் கூறுகின்ருனே!'' என்று பெரியோர் ஒருவரோடு ஒருவர் பேசிக்கொண்டனர். சிறிது நேரம் கழிந்தது. ஆந்தையார் அங்குத் தோன்றினுர்; அரசனை நேரில் கண்டார். மன்னனும் அவரை ஆவலோடு நோக்கினுன். இருவரும் மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கினர்; ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டனர். உடன் இருந்த பெரியோர் இந்த நிகழ்ச்சியைக் கண்டு வியந்தனர்.

இக்காட்சியைக் கண்ட பொத்தியார் என்ற புலவர் கீழ்வருமாறு கூறினுர்: ''சோழர் பெருமான் அரசைத் துறந்தது வியப்புக்குரியது. அவனை இது வரையில் பாராமலே வேற்று நாட்டில் இருந்த புலவர் ஒருவர் அவனது நிலையை எப்படியோ உணர்ந்து இங்கு வந்திருப்பது மிக்க வியப்பை உண்டாக்குகிறது. அவனேடு நெருங்கிப் பழகியவரை விட அவனை இதுவரையில் பாராத ஆந்தையார், அவனைத் தம் உயிரென மதித்திருத்தல் மேலும் வியப்பிற்குரியது. இப்புலவர் இங்கு வருவார் என்று வேந்தன் கூறியதும், அவன் கூறியபடியே புலவர் இங்கு வந்திருப்பதும் சொல்ல முடியாத வியப்பை உண்டாக்குகின்றன.''

சோழ வேந்தன் ஆந்தையாரை அன்புடன் நோக்கி, ''புலவர் பெருமானே, நான் உம்மை நேரில் கண்டதில்லை. ஆயினும் உம்முடைய நல்ல பண்புகளைப் பிறர் கூறக் கேட்டிருக்கிறேன்; நீர் என்னையே உயிர் நண்பனுக மதித்திருப்பதையும் கேள்வியுற்றேன். நானும் உம்மை என் உயிரினும் மேலாக மதித்து வருகிறேன்,'' என்று கூறி மகிழ்ந்தான். புலவர் மகிழ்ச்சி மிகுதியால் அவனைப் பார்த்தபடியே அமர்ந்திருந்தார்.

### நரை இல்லாமைக்குக் காரணம்

அங்குக் கூடியிருந்த பெரியோருள் சிலர் ஆந்தையாரை நோக்கி, ''பெரியீர், நாங்கள் இளைஞராய்

இருந்தபொழுது உங்களை மதுரையில் பார்த்திருக்கிறோம். நாங்கள் உங்களைப் பார்த்துப் பல ஆண்டுகள் கழிந்துவிட்டன. எங்கள் தலைமுடி நரைத்துவிட்டது. எங்களைவிடப் பல ஆண்டுகள் மூத்துள்ள உங்கள் தலைமுடி இதுவரையில் நரைக்கவில்லையே! இதற்கு உரிய காரணம் யாது?'' என்று கேட்டனர்.

அது கேட்ட ஆந்தையார் புன்முறுவல் கொண்டார். அவர் அவர்களை நோக்கிக் கீழ்வருமாறு கூறினார்:

''பெரியீர், என் மனைவி என்னிடம் மிக்க மதிப்புடையவள்; என்னைத் தன் உயிராக மதிப்பவள்; என் சொற்படி நடப்பவள்; என் மக்கள் அன்பும் பணிவும் உள்ளவர்கள்; பெற்றோர்க்கு அடங்கி நடப்பவர்கள். என் வீட்டில் பணிசெய்யும் ஏவலரும் நல்ல பண்புகள் மிக்கவர். எனது நாட்டு அரசன் குடிகளுக்கு நல்லவற்றையே செய்பவன். என் ஊரில் உள்ள மக்களுள் கல்வி, கேள்வி, ஒழுக்கம் ஆகிய மூன்றினாலும் உயர்ந்தவர் பலராவர்.''

புலவர் கூறியதன் கருத்து யாது?

புலவர் தம் வீட்டுக்குத் தலைவர். அவர் மனைவியும் மக்களும் ஏவலரும் நல்ல பண்புகளை உடையவர்கள்; தலைவர் சொற்படி நடப்பவர்கள். ஆதலால் புலவரது வீட்டில் கருத்து வேறுபாடுகள் இல்லை என்பது கருத்து. புலவர் வாழ்ந்த ஊரில் கல்வி, கேள்வி, ஒழுக்கங்களில் சிறந்த பலர் வாழ்ந்தனர். ஆதலால் அவ்வூரிலும் குழப்பம் இல்லை. நாட்டை ஆண்ட மன்னனும் நல்லவற்றையே செய்பவன். ஆதலால் ஆட்சி செம்மையாகவே நடைபெற்றது. ஒருவனுக்கு அவன் வாழும் வீட்டில் துன்பமில்லை; ஊரில் துன்பமில்லை; நாட்டிலும் துன்பமில்லை; அவன் எங்கும் இன்பத்தையே அநுபவிக்கிறான். அவன் கவலைப்படுவதற்கு ஒன்றும்

இல்லை. கவலை இல்லாததால் அவன் மனம் மகிழ்ச்சியிலேயே வாழ்கிறது. அதனால் அவனுக்கு நோயில்லை; முடியும் நரைப்பதில்லை.

புலவர் கூறிய பதிலில் அமைந்திருந்த இந்த உட்கருத்தினைப் பெரியோர் உணர்ந்து மகிழ்ந்தனர்.

### ஆந்தையார் வடக்கிருத்தல்

தம் உள்ளம் கவர்ந்த வேந்தன் உண்ணு நோன்பினை மேற்கொண்டது போலவே ஆந்தையாரும் அந்நோன்பினை மேற்கொண்டார். அரசனும் அவரும் இறக்கும் வரையில் அந்த நோன்பினைத் தொடர்ந்தனர். பெரியோர் அவ்விருவரையும் கண்டு வியந்தனர். கண்ணகனுர் என்ற புலவர் அக் காட்சியைக் கண்டார்; கீழ்வரும் கருத்தமைந்த பாடல் ஒன்றை அங்குப்பாடினுர்:

“பொன்னும் மணிகளும் நிலத்திற்கு அடியிலிருந்து எடுக்கப்படுபவை. முத்தும் பவழமும் கடலிலிருந்து எடுக்கப்படுபவை. ஆயினும் கல் பதித்த நகைகள் செய்யும்பொழுது இவை ஒன்று சேருகின்றன. இவைபோலவே வேறு வேறு நாடுகளில் உள்ள பெரியோர் சமயம் வரும்பொழுது ஓர் இடத்தில் ஒன்று கூடுவர்.”

சங்க காலத்தில் ஆந்தையாரும் பிற புலவரும் பாடிய பாடல்கள் புறநானூறு என்னும் நூலில் உள்ளன. அப்பாடல்கள் அக்காலப் பழக்க வழக்கங்களையும், அரசர்கள் புலவர்கள் பற்றிய செய்திகளையும் தெரிவிப்பனவாகும்.

10

# 2. கோவூர்கிழார்

## சோழ நாடு

இன்றுள்ள தஞ்சாவூர் மாவட்டம், திருச்சிராப் பள்ளி மாவட்டம், தென்னார்க்காடு மாவட்டத்தின் தென்கோடிப் பகுதி ஆகியவற்றின் நிலப்பரப்பே பழைய காலத்தில் சோழ நாடு எனப் பெயர் பெற்றது. அந்நாட்டில் காவிரியாறு பல கிளை களாகப் பிரிந்து நிலத்தை வளப்படுத்தியது; இன்றும் வளப்படுத்திவருகின்றது. காவிரியின் கிளைகள் கொள்ளிடம், அரிசிலாறு, வெட்டாறு, வெண்ணாறு, வடவாறு முதலியன. இத்துணை ஆறு களும் பாய்ந்து பாய்ந்து, சோழ நாட்டு மண்ணைப் பதப்படுத்திப் பயிர் விளையும் நன்செய் நிலமாக மாற்றிவிட்டன. சோழ நாட்டில் மலைகள் இல்லை; மலைத்தொடர்களும் இல்லை. நீர் வளத்தினால் வாழைத் தோட்டங்களும் மாந்தோப்புக்களும் பலாத்தோப்புக்களும் தென்னந் தோப்புக்களும் நன்கு வளர்ந்து அழகிய காட்சியை வழங்கின. சோழநாட்டு ஊர்களைச் சுற்றிலும் இத்தோப்புக்கள் இருந்து அழகு செய்தன.

சோழ நாட்டை ஆண்டவர் சோழர் எனப்பெயர் பெற்றனர். சோழ நாட்டின் தலைநகரம் **உறையூர்** என்பது; துறைமுகப் பட்டினம் **புகார்** என்ற **காவிரிப்பூம்பட்டினம்** என்பது. அரசனுக்கு இந்த இரண்டு நகரங்களிலும் அரண்மனை இருந்தது. வளம் பொருந்திய சோழ நாட்டை ஆண்ட சோழர் **வளவர்** எனப்பட்டனர். சோழ வளநாடு சோற்றுப் பஞ்சம் இல்லாமல் இருந்தது. அதனால் ‘சோழ

வளநாடு சோறுடைத்து' என்று தமிழ்ப் புலவர் கள் சோழ நாட்டைப் பாராட்டினார்கள்.

### கோவூர்

சோழ நாட்டு ஊர்களுள் கோவூர் என்பது ஒன்று. அவ்வூரில் வாழைத் தோட்டங்களும் தென்னந்தோப்புக்களும் மாஞ்சோலைகளும் இருந்தன. அவ்வூரைச் சுற்றிலும் நெல் விளையும் நிலங்கள் நிரம்பி இருந்தன. ஆற்றிலிருந்து வந்த இருகால்கள் அந்நிலங்களுக்கு நீரைப் பாய்ச்சி வந்தன. ஊரார் அக்கால்களில் நீராடினர்; தங் கள் உடைகளைத் துவைத்தனர்; தங்கள் வீட்டுப் பாத்திரங்களைத் தூய்மை செய்தனர். அவ்வூரில் நல்ல ஒழுக்கம் மிகுந்த பெரியோர் பலர் இருந் தனர். அவர்கள் அக்காலத் தமிழ் நூல்களை நன்கு படித்தவர்; அன்பு, அடக்கம் முதலிய நல்ல பண்பு களைப் பெற்றவர். அவ்வூர் உழவர்கள் மிகுந்த ஊக்கம் உடையவர்; நாள் முழுமையும் வயல்களில் வேலை செய்தனர். அவர்களுக்கு உதவியாக அவர் வீட்டுப் பெண்களும் வயல் வேலையில் ஈடுபட்டனர்.

### கோவூர்கிழார்

வளம் மிகுந்த கோவூரில் ஒரு பெரியவர் வாழ்ந்தார். அவர் தமிழ் நூல்களை நன்கு படித் தவர்; நல்ல ஒழுக்கம் உடையவர். அவர் எப் பொழுதும் மலர்ந்த முகத்துடன் விளங்கினார்; செல்வரிடத்தும் ஏழைகளிடத்தும் மிக்க அன்புடன் பழகினார். ஆதலால் ஊரார் அனைவரும் அவரைப் பெரிதும் மதித்தனர். அவர் மனைவியாரும் அவரைப்போலவே நல்ல பண்புகளைப் பெற்றவர். அவ்வம்மையார் கணவர் சொற்படி நடந்து குடும் பத்தை நல்ல முறையில் நடத்திவந்தார்.

அம்மையார் ஓர் ஆண் மகவைப் பெற்றார்.

தாயாரும் தந்தையாரும் அக் குழந்தையைத் தாலாட்டிச் சீராட்டி வளர்த்தனர். அக் குழந்தை ஐந்து வயதுடைய பிள்ளையான பின்பு, தந்தையார் கல்வி கற்பிக்கத் தொடங்கினர். கல்வியிலும் நல்ல ஒழுக்கத்திலும் சிறந்து விளங்கிய தந்தையினல் அப்பிள்ளை நன்கு வளர்க்கப்பட்டான்; தந்தையார் கற்பித்த பாடங்களை நன்கு படித்தான். சில ஆண்டுகள் கழிந்த பின்பு அப் பையன் புலவர் ஒருவரிடம் தமிழ் இலக்கணத்தையும் பல செய்யுள் நூல்களையும் பயின்முன். அவனுக்கு வயது ஆக ஆக, அவனிடம் இருந்த அடக்கம், பணிவு, பிறரை மதித்தல், எல்லோருடனும் அன்புடன் பழகுதல், நல்லவற்றையே பேசுதல் முதலிய நல்ல பண்புகள் வளர்பிறைபோல வளர்ந்தன. அந்த இளைஞன் சிறந்த புலவனுயும் விளங்கினுன். ஊரார் அவனைப் பெரிதும் மதித்தனர். அந்த இளைஞனே காலப் போக்கில் கோவூர்கிழார் என்று அழைக்கப்பட்டான்.

### நலங்கிள்ளி

கோவூர்கிழார் வாழ்ந்த காலத்தில் நலங்கிள்ளி என்பவன் சோழ நாட்டை ஆண்டுவந்தான். அவன் கோவூர்கிழாரைப் போலவே தமிழ் நூல்களைப் படித்தவன்; செய்யுள் செய்வதில் வல்லவன்; சிறந்த போர் வீரன். அவன், கண்ணை இமைகள் காப்பது போலத் தன் குடிகளைப் பாதுகாத்து வந்தான்; நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்கினுன்; தரிசு நிலங்களை வயல்களாக்கினுன்; குடிகளுக்கு விலங்குகளாலும் அயல்நாட்டு அரசர்களாலும் உண்டாகத்தக்க அச்சத்தைப் போக்கினுன். இந்த நல்ல முயற்சிகளால் சோழ நாட்டுக் குடிகள் அவனைச் செங்கோல் அரசன் என்று பாராட்டினர்.

கோவூர்கிழார் ஒருமுறை நலங்கிள்ளியின் அரண்மனைக்குச் சென்முர். அப்பொழுது அரசன்

புலவர் பலருடன் உரையாடிக்கொண்டிருந்தான். அவன் முன்பே கோவூர்கிழாரைப்பற்றிக் கேள்விப் பட்டிருந்தான்; அவரைப் பார்க்க விரும்பினான்; அவரே தன் அரண்மனைக்கு வந்ததைக் கண்டு மன மகிழ்ந்தான்; எழுந்து நின்று மிக்க மரியாதையுடன் வரவேற்றான். அங்கு இருந்த புலவரும் மிக்க மரியாதையுடன் அவரை வரவேற்றனர். கோவூர் கிழார் நலங்கிள்ளியின் நல்ல ஆட்சியைப்பற்றி ஒரு செய்யுளைப் பாடினார். நலங்கிள்ளி அப்பாடலின் பொருளை உணர்ந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தான்; அவருக்குப் பல பரிசுகள் கொடுத்தான்; அடிக்கடி தன் அரண்மனைக்கு வருமாறு வேண்டினான்.

### போர்க் களத்தில் புலவர்

நெடுங்கிள்ளி என்பவன் நலங்கிள்ளியின் பங்காளி. அவன் சோழ நாட்டைக் கைப்பற்ற விரும்பினான்; அதனால் ஒரு படையைத் திரட்டினான்; தன் படை வீரருடன் நலங்கிள்ளியை எதிர்த்தான். நலங் கிள்ளி சிறந்த வீரன்; ஆதலால் தன் பெரும் படை யுடன் நெடுங்கிள்ளியை எதிர்த்தான். போர்க் களத்தில் இரண்டு படைகளும் ஒன்றை ஒன்று எதிர்க்கத் தக்க நேரத்தைப் பார்த்துக்கொண்டு நின்றன.

கோவூர்கிழார் இதனைக் கேள்வியுற்றார். அவர் போரை விரும்பாதவர்; நாட்டில் அமைதி ஒன்றையே விரும்பினவர்; அந்த இருவர் போராட்டத்தால் நாடும் நாட்டின் நல்வாழ்வும் அழியும் என்பதை அறிந்தார். அவர் உள்ளம் நெருப்பில் விழுந்த புழுப்போலத் துடித்தது. அவர் போரை நிறுத்த விரும்பினார்; அதனால் போர்க் களத்தை நோக்கி ஓடினார்; நலங்கிள்ளியையும் நெடுங்கிள்ளியையும் பார்த்துக் கீழ் வருமாறு கூறினார் :

“ நீங்கள் இருவரும் சோழர் குடியில் பிறந்தவர்கள். ஆதலால் நீங்கள் வேறு அரசரோடு போர் புரிவது முறையாகும். ஒரே குடியில் பிறந்த நீங்கள் ஒருவரோடு ஒருவர் போர் புரிவது முறை



அன்று. சேரனும் பாண்டியனும் உங்கள் செயலேப் பார்த்து நகைப்பர்; நீங்கள் போரிட்டு அழிவதைப் பார்க்க மகிழ்வர். உங்கள் போரினுல் இந்நாட்டு வீரர்களும் பொதுமக்களும் துன்பப்படுவர்; பயிர்த் தொழில் கெடும்; கைத்தொழிலின் வளர்ச்சி குன்றும்; வாணிகம் சீரழியும்; வளம் மிகுந்த இச் சோழ நாட்டில் பஞ்சம் தலேதூக்கும். குடிமக்கள் உங்களே வெறுப்பர். நீங்கள் இருவரும் நான் கூறியவற்றை எண்ணிப்பாருங்கள். எண்ணிப் பார்த்த பின்பு உங்களுக்கு ஏற்றதைச் செய்யுங்கள்.”

நலங்கிள்ளியும் நெடுங்கிள்ளியும் புலவர் கூறிய உண்மைகளே உணர்ந்தனர். அதனுல் போர்புரிய

வேண்டும் என்ற ஆர்வம் குறைந்தது. இருவரும் போரைக் கைவிட்டனர். புலவர் அறிவுரையினுல் போர் நின்றுவிட்டது என்பதை உணர்ந்த குடி மக்கள், கோவூர்கிழாரை உளமாரப் பாராட்டினர்.

### ஆவூர் முற்றுகை

சில காலம் கழிந்த பின்பு நெடுங்கிள்ளி மீண்டும் போர் புரிய எழுந்தான். நலங்கிள்ளி போரை விரும்பாதவன்; ஆயினும் வந்த போரை விடாதவன். ஆதலால் அவன் ஒரு பெரும் படையுடன் புறப்பட்டான். நலங்கிள்ளியின் பெரிய படையைக் கண்டதும் சிறிய படையை உடைய நெடுங்கிள்ளி அஞ்சினுன்; ஆவூர் என்ற ஊரிலிருந்த கோட்டையுள் புகுந்துகொண்டான். நலங்கிள்ளி அக்கோட்டையை முற்றுகையிட்டான். நாட்கள் பல சென்றன. நெடுங்கிள்ளி கோட்டையை விட்டு வெளியில் வரவில்லை. நலங்கிள்ளியும் தன் முற்றுகையைத் தளர்த்தவில்லை.

கோவூர்கிழார் இத்துன்ப நிலையைத் கேள்வியுற்றார். அவர் உள்ளம் துடித்தது ; பங்காளிகள் போரினுல் நாட்டு மக்கள் துன்பப்படுவதை உணர்ந்தார்; ஆவூர் நோக்கிச் சென்றார்.

### இளந்தத்தன் விடுதலை

கோவூர்கிழார் அங்குப் போவதற்கு முன்பு எதிர்பாராமல் வேருெரு நிகழ்ச்சி நடந்துவிட்டது. இளந்தத்தன் என்பவர் ஒரு புலவர். அவர் வறுமையால் மிகவும் துன்பப்பட்டார்; நலங்கிள்ளியைக் கண்டு தம் வறுமையை விளக்கினுர். நலங்கிள்ளி அப்பொழுது ஆவூர்க்கோட்டையை முற்றுகையிட்டுக்கொண்டிருந்தான். அவன் அந்த நெருக்கடியான சமயத்திலும் புலவருக்குப் பொருள் கொடுத்து உதவினுன். அப்புலவர் கோட்டையுள் நுழைந்து நெடுங்கிள்ளியைக் கண்டு தம் குறையைக் கூறினுர்.

அவர் நலங்கிள்ளியிடமிருந்து வந்ததை நெடுங் கிள்ளியின் ஆட்கள் அவனிடம் கூறினர். அனைவரும் அப்புலவர் ஒற்றர் என்றே துணிந்தனர். நெடுங் கிள்ளி அவரைக் கொல்ல முடிவு செய்தான்.

கோவூர்கிழார் திடுக்கிடத்தக்க இச்செய்தி யைக் கேள்வியுற்ருர். அவர் மனம் பதைத்தது. அவர் நெடுங்கிள்ளியிடம் ஓடினுர்; "அரசே, புலவன் அறிவில் சிறந்தவன்; ஆயினும் பொருள் இல்லா தவன். அவன் எந்த அரசனிடத்திலும் சென்று பரிசு பெறுவது இயல்பு. இவ்வழக்கப்படி இளந்தத்தன் என்ற புலவர் நலங்கிள்ளியினிடம் பரிசு பெற்ருர்; பின்பு உனது உதவியை நாடி இங்கு வந்தார். ஒரு குற்றமும் செய்யாத அவரை நீ ஒற்றன் என்று தவருக எண்ணியுள்ளாய். அவரை உடனே விட்டு விடுதல் நல்லது. அவரைக் கொல்லுதல் சோழர் மரபுக்கே பழியை உண்டாக்குவதாகும்." என்று உருக்கமாக உரைத்தார்.

நெடுங்கிள்ளி உண்மையை உணர்ந்தான்; புலவரைக் கொல்லாது விட்டான். கோவூர்கிழார் அவனுக்கு நன்றி கூறினுர்.

புலவர் அறிவுரை

கோவூர்கிழார் மேலும் நெடுங்கிள்ளியுடன் பேச விரும்பினுர். அவர் அவனை நோக்கிக் கீழ்வரு மாறு கூறினுர்: "அரசே, நீ முன்பு ஒரு முறை எனது வேண்டுகோள்மீது போரை நிறுத்தினுய்; இப் பொழுது மீண்டும் போரைத் தொடங்கியுள்ளாய். போரைத் தொடங்கிய நீ போர்களத்தில் உனது ஆண்மையைக் காட்டிப் போர் புரிவதே நல்லது. அதனை விட்டு இக் கோட்டையுள் அடங்கியிருத்தல் முறையன்று. நீயும் உன் வீரரும் இங்கு இருப்ப தால், நலங்கிள்ளி இக்கோட்டையை முற்றுகை யிட்டுள்ளான். இதனுல் கோட்டையுள் வாழ்பவர்

வெளியில் செல்ல இயலவில்லை. அவர்கள் நாள் தோறும் கோட்டைக்கு வெளியில் சென்று தங்கள் தொழில்களைச் செய்பவர்கள். அவர்கள் செய்து வந்த தொழில்கள் இந்த முற்றுகையினால் பாதிக்கப் பட்டுள்ளன. கோட்டையுள் வாழும் பெண்கள் உன் வீரர்களைக்கண்டு வீட்டைவிட்டு வெளியில் வர அஞ்சுகின்றனர். சிறுவர் சிறுமியரும் வெளியில் வந்து விளையாட அஞ்சுகின்றனர். இவ்வாறே கோட்டைக்கு வெளியில் வாழ்பவரும் கோட்டை யில் வந்து பல தொழில்களைச் செய்வது வழக்கம். இப்பொழுது கோட்டையின் காவல் மிகுந்துள்ளது. அதனால் அம்மக்கள் கோட்டையுள் நுழைய முடியா மல் துன்புறுகின்றனர். இந்த முற்றுகையினால் குடி மக்களுக்கு எத்துணைத் துன்பங்கள் உண்டாகியுள் ளன என்பதை எண்ணிப்பார்க்க வேண்டுகிறேன்.

"உன் முன்னோருள் ஒருவன் ஒரு புறுவின் துன்பத்தைப் போக்க விரும்பினான்; அதனைக் காக்கத் தன் சதையையே அறுத்துக் கொடுத்தான். நீ அவன் பரம்பரையில் வந்தவன் ஆதலால் நீ குடிமக்கள்மீது இரக்கம் கொண்டு கோட்டையை விட்டு வெளியேறுவது நல்லது. நீ கோட்டையைக் காலி செய்தால், நெடுங்கிள்ளி முற்றுகையைக் கைவிடுவான். குடிகளின் துன்பம் நீங்கும்."

புலவர் கூறிய ஒவ்வொரு சொல்லும் நெடுங் கிள்ளியின் உள்ளத்தில் தைத்தது. அவர் கூறிய அனைத்தும் உண்மை என்பதை அவன் உணர்ந் தான். அவன் கோட்டையைவிட்டு வெளியேறினான். அதனால் நலங்கிள்ளி முற்றுகையைக் கைவிட்டான். ஆவூர் மக்கள் புலவரது தொண்டினைப் பாராட்டி மகிழ்ந்தனர்.

**கிள்ளிவளவன்**

நலங்கிள்ளிக்குப் பின்பு **கிள்ளிவளவன்** என்பவன் சோழ நாட்டை ஆண்டான். அவன் போர்புரிவதில்

வல்லவன்; புலவரை ஆதரிப்பதிலும் சிறந்தவன். கோவூர்கிழார் அவன் காலத்திலும் வாழ்ந்தார். கிள்ளிவளவன் அப்புலவரை மிக்க மரியாதையுடன் நடத்திவந்தான். அவன் எப்பொழுதும் அவர் அறிவுரையைக் கேட்பதில் ஆர்வம் கொண்டான். புலவர் அவனை அவ்வப்போது கண்டு மகிழ்வது வழக்கம்.

அப்பொழுது திருக்கோவலூர் நாட்டை மலையமான் திருமுடிக்காரி என்பவன் ஆண்டுவந்தான். அவன் புலவர்களுக்கு வேண்டியவற்றை வழங்கிப் புகழ் பெற்றவன். அவனிடம் பெரும்படை இருந்தது. அவன் அப்படையைக்கொண்டு, தன் உதவியை விரும்பிய அரசர் பக்கம் நின்று போரிடுவது வழக்கம். அவனுக்கும் கிள்ளிவளவனுக்கும் எக்காரணத்தாலோ பகைமை உண்டானது. கிள்ளிவளவன் அவ்வள்ளலின் மக்கள் இருவரைத் தன் தலைநகருக்குக் கவர்ந்து வந்தான்; யானையை ஏவி அவர்களைக் கொல்ல முடிவு செய்தான்.

## புலவரின் தொண்டு

கோவூர்கிழார் இச்செய்தியைக் கேள்வியுற்றார். அவர் மனம் திடுக்கிட்டது. அவர் சோழன் அரண்மனையை நோக்கி ஓடினார். அப்பொழுது அரண்மனைக்கு வெளியில் சோழன் அமர்ந்திருந்தான். அவனுடைய அமைச்சரும் பிறரும் அவனுக்கு அருகில் நின்றனர். மலையமான் மக்கள் இருவரும் சிறுபிள்ளைகள். அப்பிள்ளைகள் ஓரிடத்தில் நிறுத்தப்பட்டிருந்தனர். அவர்களைக் கொல்ல யானை ஒன்று வருவிக்கப்பட்டது. அந்த யானை தங்களைக் கொல்லவே வருவிக்கப்பட்டது என்பது அப்பிள்ளைகளுக்குத் தெரியாது. அவர்கள் தங்கள் அழுகையை நிறுத்தி, அந்த யானையைப் பார்த்துக்கொண்டிருந்தனர்.

கிள்ளிவளவன் அங்கு வந்த கோவூர்கிழாரை மகிழ்ச்சியுடன் வரவேற்ருன்; புலவரது முகம் வாடி இருப்பதைக் கண்டான்; ''புலவரே, ஏன் உமது முகம் வாடியிருக்கிறது?'' என்று கேட்டான். புலவர் விழிகளில் நீர் அரும்பியது. அவர் அரசனே நோக்கி, ''மன்னர் பெருமானே, நீ இப்போழுது செய்ய விரும்பும் செயலேப்பற்றிக் கேள்வியுற்றேன். என் மனம் பொறுக்கவில்லே. அதனுல் இங்கு ஓடி வந்தேன். ஐயனே, இச்சிறு பிள்ளேகள் உனக்கு ஒரு தவறும் செய்யவில்லே. இவர்களுடைய தந்தை தான் உனக்குப் பகைவன். சிறந்த அறிஞனுகிய நீ அவன்மீது கொண்ட பகையை அவன் பிள்ளேகள் மீது காட்டலாமா? இச் சிறுபிள்ளேகளுக்கு என்ன தெரியும்? இப்பிள்ளேகள் ஒரு குற்றமும் செய்யா தவர். யானேயைக் கொண்டு இவர்களேக் கொல்வ தால் நீ அடையும் நன்மை யாது? இக் கொடிய செயல் சோழர் மரபிற்கு இழிவை உண்டு பண்ணுமே! அறநெறி தவருமல் ஆட்சி புரியும் நீ இக்கொடுஞ் செயலேச் செய்யத் துணிந்தது நேர்மை யாகாது. இவர்களே விடுதலே செய். உனது சீற்றத்தை இவர்களின் தந்தையிடம் காட்டு. அதுவே உன்போன்ற வீரர்க்கு அழகு,'' என்று நயமாக உரைத்தார்.

கிள்ளிவளவன் புலவர் கூறியவற்றைப் பொறுமையுடன் கேட்டான். அவரது அறிவுறை அவன் எண்ணத்தை மாற்றியது. அம்மன்னன் உடனே அப்பிள்ளேகளே விடுதலே செய்தான். அது கண்ட புலவர் மிக்க மகிழ்ச்சி அடைந்து மன்னனே மனமாற வாழ்த்தினுர்.

# 3. ஔவையார்

### ஔவையார்

சங்க காலத்தில் நமது தமிழ் நாட்டில் சேர, சோழ, பாண்டியர் என்ற முடி அணிந்த மன்னர் மூவர் வாழ்ந்தனர். முடி இல்லாத சிற்றரசர் பலரும் வாழ்ந்தனர். அக்கால அரசர்கள் கல்வியில் ஊக்கம் காட்டினர். அவருள் பலர் தமிழ் நூல்களை நன்கு கற்றுச் செய்யுட்களைத் தாமே இயற்றினர். அரசர்களின் ஊக்கத்தினுல் ஆடவரும் பெண்டிரும் கல்வி கற்றனர். அவருள் சிலர் பெரும் புலமை பெற்று விளங்கினர். சங்ககாலப் புலவர் ஏறத்தாழ ஐந்நூற்றுவர் என்னலாம். அவருள் பெண்பாலரும் இருந்தனர். அப்பெண்பாலருள் புகழ் பெற்றவர் ஔவையார் என்பவர்.

ஔவையார் தமிழ் நூல்களைத் தக்க ஆசிரியர்களிடம் கற்ருர்; செய்யுள் செய்யும் ஆற்றலைப் பெற்ருர். அவர் நிறைந்த கல்வி அறிவு உடையவர். ஆதலால் அவர் பேரரசருடனும் சிற்றரசருடனும் எளிதில் பழகினுர். அந்த அம்மையார் நடனக் கலையிலும் வல்லவர். அவர் அஞ்சாமை மிக்கவர்.

### அதியமான்

சேலம் மாவட்டத்தில் உள்ள ஊர்களுள் தருமபுரி என்பது ஒன்ருகும். அது சங்க காலத்தில் தகடூர் எனப்பெயர் பெற்றது. அது தகடூர் நாட்டின் தலைநகர். அந்நாட்டில் மலைகள் மிகுதி; காடுகளும் மிகுதி. அந்நாட்டை அக்காலத்தில் ஆண்டவர் அதியமான்கள் என்ற பட்டத்தைப் பெற்றவராவர். அவருள் ஔவையார் காலத்தில் வாழ்ந்தவன் அதியமான் நெடுமான் அஞ்சி என்பவன். அவன் போருக்கு

அஞ்சாதவன்; தமிழ்ப் புலவர்களை ஆதரிப்பதிலும் பெயர் பெற்றவன். அவனுடைய வீரர் அம்புகள் எய்வதிலும், வாட்போர் புரிவதிலும், ஈட்டி எறிவதிலும் சமர்த்தர். அதியமான் பல போர்களில் வெற்றி பெற்றவன். அவன் செங்கோல் அரசன் என்று குடிகளால் பாராட்டப் பெற்றவன்.

புலவரும் அதியமானும்

கவி பாடுவதிலும் கூத்து ஆடுவதிலும் சிறந்திருந்த ஔவையார் அதியமானது சிறப்பைக் கேள்வியுற்றார். அதனால் அவர் தகடூர் நோக்கிச் சென்றார்; அதியமானைக் கண்டு தமது புலமையைக் காட்டினார். அதியமான் அவரது கவிபாடும் திறமையைக் கண்டு வியந்தான்; அவரது நுண்ணறிவைக் கண்டு மகிழ்ந்தான்; அவருடைய இனிய பேச்சுக்களைக் கேட்டு இன்பம் அடைந்தான். அவன் அவரைப் பாராட்டிப் பரிசு கொடுக்க எண்ணினான்; பரிசு கொடுப்பின் அவர் தன்னை விட்டுச் சென்று விடுவாரோ என்று அஞ்சினான். அவன் அந்த எண்ணத்தைக் கொண்டு அவருக்கு உடனே பரிசு கொடுக்கவில்லை. அப்பெருமகன் அவரைத் தன்னோடு இருந்து உண்ணச் செய்தான்; அவருடைய உரையாடலில் இன்பத்தைக் கண்டான். இங்ஙனம் நாட்கள் சில சென்றன.

அதியமான் தனக்குப் பரிசு வழங்குவான் என்று ஔவையார் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தார்; ஒவ்வொரு நாளும் ஏமாற்றம் அடைந்தார். அவனது உள்ளக் கருத்தை அவரால் உணர முடியவில்லை; அவன் தனக்குப் பரிசு தராமல் ஏமாற்றுவான் என்று தவறாக எண்ணினார்; சினம் கொண்டார். அவர் ஒருநாள் காலையில் தம்முடைய பொருள்களை எடுத்துக்கொண்டு அரண்மனை வாயிலுக்கு வந்தார். அங்கு வாயிற் காவலன் நின்றிருந்தான். ஔவையார் அவனைப் பார்த்து, "வாயிற்

காவலனே, உன் அரசன் எனது மதிப்பை உணர வில்லை; தனது மதிப்பைக் காத்துக்கொள்ளவு மில்லை. இவன் பரிசு தருவான் என்று நம்பி நான் இங்கு வந்தேன். நான் வந்து சில நாட்கள் கடந்து விட்டன. உன் மன்னன் என்னுடன் முகமலர்ச்சி யுடன் பேசினான்; நல்ல உணவுப் பொருள்களைப் படைத்தான்: ஆயினும் நான் எதிர்பார்த்தபடி பரிசு தரவில்லை. நான் இங்கிருந்து வெறுங்கையுடன் போவது அவனது பெருமைக்குச் சிறுமை அன்றோ ?

"ஒரு மரத்தில் பழங்கள் இல்லையாயின் பறவை கள் வேறொரு மரத்திற்குப் பறந்து செல்லும். அவை எப்படியும் முயன்று பழங்களைத் தின்று உயிர் வாழ்வது இயல்பு. அவைபோலவே புலவர்களும் எந்த வள்ளலையாவது நாடிச் சென்று பரிசு பெற்றே வாழ்வது இயற்கை. உனது அரசன் எனக்குப் பரிசு கொடாவிடின், எனக்கு எவ்விதக் கெடுதலும் உண்டாகாது. இத்தமிழகத்தில் இவன் ஒருவன் தான் வள்ளலா? இவனைப்போல் பலர் உள்ளனர். அப்பலருள் சிலரேனும் எனக்கு உதவி புரிவர். நான் வெளியேறுகிறேன்," என்று கூறிக்கொண்டு அரண்மனை வாயிலைக் கடந்தார்.

ஔவையார்—அவைப் புலவர்

அரண்மனை வாயிற்காவலன், ஔவையார் சீற்றத்துடன் பேசியதைக் கேட்டுத் திடுக்கிட்டான். எந்தப்புலவரும் இவ்வளவு சீற்றத்துடன் பேசியதை முன்பு அவன் பார்த்ததில்லை. அவன் அரண் மனையுள் ஓடினான்; அதியமானைக்கண்டு பணிந் தான்; ஔவையார் வருத்தத்துடன் அரண்மனையை விட்டுப் போவதை அறிவித்தான். உடனே அதியமான் தன் இருக்கையை விட்டு எழுந்து ஓடினான்; ஔவையாருக்கு எதிரில் சென்று வணங்கினான்; அரண்மனைக்குத் திரும்பி வரவேண்டு மென்று வேண்டினான். ஔவையார் ஒன்றும்

பேசாது அரண்மனையை நோக்கித் திரும்பினர். அதியமான் அவரை அமரச்செய்து மிக்க பணிவுடன் கீழ்வருமாறு பேசினன்:

"தமிழ் அன்னையே, யான் உனது தமிழ் அறிவை நன்கு அறிவேன்; உனது அரசியல் அறிவையும் பாராட்டுகிறேன்; உன்னை விட்டுப் பிரிய என்மனம் இசையவில்லை; பரிசு கொடுப்பின் நீ என்னை விட்டு நீங்கிவிடுவாய் என்று அஞ்சினேன். நீ எப்பொழுதும் என் அவைப் புலவராய் இருந்து என்னைச் சிறப்பிக்க வேண்டும் என்பது என் அவா ஆகும். நீ என் மனக் கருத்தை அறியாய்; அதனுல் என்னைப்பற்றித் தவருக நினைத்தாய். நான் உடனே பரிசு தராதிருந்தது தவருயின், என்னை மன்னிக்க வேண்டுகிறேன்"

அதியமான் பேசிய பின்பே ஔவையார் அவனது உள்ளக்கருத்தைத் தெளிவாக உணர்ந்தார். அவர் மிக்க மகிழ்ச்சியடைந்தார். அவர் உள்ளம் குளிர்ந்தது. அவன் தம்மிடம் கொண்டிருந்த பெருமதிப்பை எண்ணியெண்ணி மகிழ்ந்தார்; தாம் அவனது கருத்தை அறியாமல் சினம் கொண்டு பேசியதற்கு வருந்தினர். அவ்வம்மையார் அதியமானை அன்புடன் நோக்கி, "மன்னவா, யான் உனது உள்ளக் கருத்தை உணராமல் சினங்கொண்டு வெளியேறினமைக்கு வருந்துகிறேன். நீ என்னிடம் கொண்டுள்ள பேரன்பையும் பெருமதிப்பையும் உணர்ந்து மகிழ்கிறேன். நீ பல்லாண்டு வாழ்க," என்று கூறி வாழ்த்தினர். ஔவையார் அன்று முதல் அவனது அவைப்புலவராய் இருந்து, அவனைத் தன் பாக்களாலும் பேச்சுக்களாலும் மகிழ்வித்துவந்தார்.

### கருநெல்லிக்கனி

அதியமான் ஒரு நாள் காலையில் தனது காட்டில் வேட்டையாடச் சென்றுன். ஒரு மலைப்

பிளவிலிருந்து கருநெல்லி மரம் ஒன்று ஓங்கி வளர்ந் திருந்தது. அம் மரத்தின் கிளை ஒன்றின் உச்சியில் நெல்லிப் பழம் ஒன்று காணப்பட்டது. அதியமான் அப்பழத்தைக் கண்டான். அதனை உண்பவர் உடல் வலிமை பெற்று நீண்ட நாள் உயிரோடு இருப்பர் என்னும் செய்தியை மலை நாட்டு மக்கள் கூறினர். அச் செய்தியைக் கேட்ட அதியமான் மிக்க மகிழ்ச்சி அடைந்தான்; அதனைப் பறித்துச் சென்று தன் அவைப் புலவரான ஔவையாருக்குக் கொடுக்க விரும்பினான்; வேட்டுவரை ஏவி அப்பழத் தைப் பறிக்கச் செய்தான்; பின்பு அதனை எடுத்துச் சென்று, அதன் சிறப்பினைக் கூறாது, ஔவை யாருக்குக் கொடுத்தான்.

ஔவையார் அதனை விருப்பத்துடன் உண் டார் ; அதனை உண்டதும் தமது உடம்பில் வலிமை யும் சுறுசுறுப்பும் மிகுவதை உணர்ந்தார். அவர் அரசனை நோக்கி, "ஐயனே, இக் கருநெல்லிப் பழத்தை உண்ட பின்பு என் உடம்பில் வலிமை பெருகுவதையும் சுறுசுறுப்பு மிகுவதையும் உணர் கிறேன். வலிமையையும் சுறுசுறுப்பையும் மிகு விக்கும் ஆற்றல் இப்பழத்திற்கு உண்டா?" என்று கேட்டார். மன்னன் புன்சிரிப்புடன் அவரைப் பார்த்து, "அம்மையே, இப்பழத்தை உண்பவர் உடல் வலிமை பெற்று நீண்ட நாள் உயிர் வாழ்வர் என்று வேட்டுவர் கூறினர். ஆதலால் இதனைப் பறிக்கச் செய்து உனக்குக் கொடுத்தேன்," என்று மறுமொழி கூறினான்.

அரசன் கூறியதைக் கேட்ட ஔவையார், "அரசே, நாட்டை ஆளும் உனக்கு வலிமையும் சுறு சுறுப்பும் மிகுதியாக வேண்டும். ஆதலால் நீயே இப்பழத்தை உண்டிருத்தல் வேண்டும். நீ ஏன் அதனை எனக்குக் கொடுத்தனை?" என்று கேட்டார். அது கேட்ட மன்னன் புன்முறுவல் பூத்தான் ;

"அம்மையே, நாட்டை ஆள்வதும், நாட்டைக் காக்கப் போர்கள் புரிவதுமே அரசன் வேலைகள். அந்த அரசன் இறப்பின் அவன் பெயரும் மக்களால் மறக்கப்பட்டுவிடும். உன்னைப்போன்ற புலவர் நீண்ட நாள் உயிர்வாழின், தாய்மொழி வளர்ச்சி அடையும்; உன் அறிவுரைகளால் அரசர் பலர் திருந்துவர். நீ பாடும் பாடல்கள் உலகம் உள்ள அளவும் நிலைபெற்றுவாழும். ஆதலால் நான் நீண்ட நாள் வாழ்வதைவிட நீ நீண்ட நாள் வாழ்வதே நாட்டுக்கு நல்லது. யான் இதனை எண்ணியே உனக்கு அப்பழத்தைக் கொடுத்தேன்," என்று விளக்கமாக உரைத்தான்.

ஔவையார் அவன் கூறியதைக் கேட்டார். அவர் கண்களிலிருந்து மகிழ்ச்சி நீர் வெளிப்பட்டது. அவர் அப்பெருந்தகையை அன்புடன் நோக்கி, "பெருமானே, நீ உனக்கென வாழாதவன்; பிறருக்காகவே வாழுகின்றவன். உன்னைப் போன்ற தன்னல மற்ற பெரியோனைக் காண்பது மிக்க அருமை. சிவபெருமான் தேவர்களைக் காக்கும் பொருட்டு நஞ்சினை உண்டான். ஆயினும் அப்பெருமான் என்றும் நிலைப்பெற்று வாழ்கின்றான். உனக்கென வாழாத நீயும் அப்பெருமானைப் போல என்றும் நிலைபெற்று வாழ்வாயாக," என்று உள்ளம் குளிர வாழ்த்தினார். அவர் வாழ்த்துதலைக் கேட்ட மன்னன் மகிழ்ச்சிக் கண்ணீர் சிந்தினான்.

### தொண்டைமான்

இன்றுள்ள செங்கற்பட்டு மாவட்டம், வட ஆர்க்காடு மாவட்டம், தென்னார்காடு மாவட்டத்தின் கிழக்குப் பகுதி, நெல்லூர் மாவட்டத்தின் தென் பகுதி ஆகியவை பழைய காலத்தில் தொண்டை நாடு எனப்பட்டன. **காஞ்சிபுரம்** அந்நாட்டின் தலை நகர். தொண்டை நாட்டை ஆண்டவர் **தொண்டைமான்கள்** எனப் பெயர் பெற்றனர்.

அவர்கள் சிறந்த கல்விமான்கள்; தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் ஆதரித்தார்கள். அவர்களிடம் பெரும்படை இருந்தது.

ஔவையார் காலத்தில் வாழ்ந்த தொண்டைமான் தமிழ்ப் பற்று மிக்கவன். அவன் வேல் முதலிய புதிய போர்க் கருவிகளைச் செய்வித்தான்; அவற்றை ஒரு பெரிய மாளிகையில் காட்சிப் பொருள்களைப் போல ஒழுங்காய் வைத்திருந்தான். அவன் எக்காரணத்தாலோ அதியமானை வெறுத்தான். வரவர அவ்வெறுப்பு மிகுதிப்பட்டது. அதனால் அவன் அதியமானோடு போர் புரியத் துணிந்தான்.

**அதியமான் சீற்றம்**

தொண்டைமான் தன்மீது படையெடுக்க விரும்புகிறான் என்பதை அதியமான் தன் ஒற்றரால் உணர்ந்தான். ஒற்றர் என்பவர் பிறநாடுகளில் நடக்கும் அரசியல் செய்திகளை மறைவில் அறிந்து, அவ்வப்போது தம் அரசனுக்குத் தெரிவிக்கும் அரசியல் அலுவலர் ஆவர். தொண்டைமானது மனநிலையை அறிந்த அதியமான் சீற்றங் கொண்டான். அவனுடைய விழிகள் சிவந்தன: மீசை துடித்தது. அவ்வேந்தன் ஔவையாரை நோக்கி, "அம்மையே, காஞ்சியை ஆளும் தொண்டைமான் என்மீது போருக்குவரத் துணிந்திருக்கிறான் என்பதை ஒற்றர் வழியாகக் கேள்வியுற்றேன். சில ஆண்டுகளாகப் போர் இல்லாமல் என் வீரர் மனம் வருந்துகின்றனர். எனக்கும் மனம் சோர்ந்திருக்கிறது. என் போர்க் கருவிகள் வேலை இல்லாமல் வீணே கிடக்கின்றன. அவன் படையெடுத்து வருவதற்குள் நாமும் போருக்கு ஆயத்தம் செய்ய வேண்டும்," என்று பேசினான்.

ஔவையார் போரை விரும்பாதவர். அரசர் இருவரிடையே போர் நடக்குமாயின், குடிமக்கள்

தாம் துன்பப்படுவர். இரு நாட்டு வீரரும் உயிர் இழப்பர். அவ்வீரர்களின் குடும்பத்தார் மிகுந்த மனவேதனையை அடைவர். போர்க்காலத்தில் நாட்டில் அமைதி இராது. பயிர்த்தொழில், கைத் தொழில், வாணிகம் முதலியன பாதிக்கப்படும். அதனுல் நாட்டில் பஞ்சம் தோன்றும். குடிமக்கள் தத்தம் அரசனையும் அவனது ஆட்சியையும் வெறுப்பர். சில சமயங்களில் உள்நாட்டுக் குழப் பங்களும் ஏற்படும். ஒளவையார் இவை அனைத் தையும் எண்ணிப் பார்த்தார்; போர் நிகழாதபடி செய்ய வேண்டும் என்று துணிவு கொண்டார்.

அவர் அதியமானை அன்புடன் நோக்கி, "மன்னவா, நின் சீற்றம் தணிவதாகுக. நாம் தொண்டைமானது படை வலிமையை அறிவது நல்லது; அடுத்து அவனது மனநிலையையும் அறிய வேண்டும். இவற்றை அறிந்த பிறகே நாம் ஒரு முடிவுக்கு வருவது நல்லது. நான் உனது சார்பில் தொண்டைமானிடம் தூது செல்ல விரும்புகிறேன்; அவனுடைய மனநிலையையும் படை வலிமையையும் அறிந்துகொள்வேன். யான் திரும்பி வந்த பின்பு நாம் போரைப்பற்றி ஒரு முடிவுக்கு வரலாம், நீ அதுவரையில் அமைதியாக இரு," என்று யோசனை கூறினர். அதியமான் அவரது யோசனைக்கு இசைந்தான்.

### அரசியல் தூதர்

அறிவிற் சிறந்த ஒளவையார் காஞ்சிக்குச் சென்றார். தொண்டைமான் ஒளவையாரை நேரில் பார்த்ததில்லை; ஆயினும் அவர் பெரும் புலவர் என்பதையும் அரசியல் அறிவு படைத்தவர் என்பதையும் அறிந்திருந்தான்; அவர் காஞ்சி வருவதைத் தன் ஒற்றரால் அறிந்து மிக்க மகிழ்ச்சி அடைந்தான்; தன் அரண்மனை வாயிலில் நின்று பணிவும் அன்பும் காட்டி அவரை வரவேற்றான்.

அந்தப்புர மாதரும் அவ்வம்மையாரைப் பேரன்புடன் வரவேற்றனர்.

ஔவையார் நறுமணப் பொருள்கள் கலந்த நன்னீரில் நீராடினர்; தொண்டைமான் கொடுத்த சிறந்த பட்டாடையை உடுத்திக்கொண்டார்; அரசனுடனும் அரசியுடனும் அமர்ந்து அறுசுவை உண்டியை அகம் மகிழ உட்கொண்டார்; தமக்கென்று ஒதுக்கப்பட்டிருந்த அறையில் படுத்து ஓய்வு எடுத்துக்கொண்டார்.



அவ்வம்மையார் மாலையில் எழுந்து சிற்றுண்டி அருந்தினர்; அரண்மனையுள் இருந்த பல மாளிகைகளையும் மண்டபங்களையும் பிறவற்றையும் பார்த்து மகிழ்ந்தார். பின்பு தொண்டைமான் அவரை அழைத்துச் சென்று போர்க்கருவிகள் வைக்கப்பட்டிருந்த பெரிய கட்டடத்தினுள் நுழைந்தான். அக்கட்டடத்துள் ஒருபுறம் வேல்கள் வரிசை வரிசையாக நிறுத்தப்பட்டிருந்தன. மற்ழெரு புறத்தில்

ஈட்டிகள் நிறுத்தப்பட்டிருந்தன. வேறொரு புறத்தில் வாள்களும் கேடயங்களும் வைக்கப்பட்டிருந்தன. பிறிதொரு புறத்தில் விற்களும் அம்புப் புட்டில்களும் காணப்பட்டன. அவை அனைத்தும் புதியனவாகக் காட்சி அளித்தன. வேல்களுக்கு எண்ணெய் பூசப்பட்டிருந்தது. ஒவ்வொரு வேலின் மீதும் மயிற்பீலி வைத்துக் கட்டப்பட்டிருந்தது.

ஔவையார் அப்போர்க் கருவிகள் அனைத்தையும் பார்த்தார்; பின்பு தொண்டைமானைப் பார்த்தார்; "மன்னவா, இப்போர்க் கருவிகள் மிகவும் புதியவை; வேல்கள் எண்ணெய் பூசப் பெற்றவை; மயிற்பீலி அணியப் பெற்றவை. இவை கண்களைக் கவர்கின்றன. நீ இவற்றை மிக நல்ல முறையில் பாதுகாத்துவருகின்றாய். ஆயின், என் அரசனாகிய அதியமானுடைய வேல்களும் ஈட்டிகளும் கொல்லன் உலைக்களத்தில் கிடக்கின்றன. அவற்றின் நுனியும் ஓரமும் மழுங்கி விட்டன," என்று தொண்டைமானைப் புகழ்வது போலவும் அதியமானைப் பழிப்பது போலவும் பேசினார்.

ஔவையார் கூறியதன் பொருள் யாது?

அதியமான் அவ்வப்போது போர் செய்பவன். பகைவரைக் குத்துவதால் வேல்களும் ஈட்டிகளும் முனைமழுங்கி ஓரமும் கெடுகின்றன. கொல்லன் அவற்றைப் பழுதுபார்க்க வேண்டும் நிலைமை உண்டாகின்றது. ஆயின் தொண்டைமானுடைய வேல்களும் ஈட்டிகளும் போரில் பயன்படுத்தப்படாதவை, ஆதலால் அவை புத்தம் புதியனவாக இருக்கின்றன. அதாவது, அதியமான் போர் அனுபவமுடையவன் என்பதும் தொண்டைமான் போர் அனுபவம் இல்லாதவன் என்பதும் ஔவையாரால் மறைமுகமாகக் கூறப்பட்டன என்பதாம்.

தொண்டைமான் நுண்ணறிவு மிக்கவன். ஆதலால் அவன் ஔவையாரது பேச்சின் உட்பொருளை நன்கு உணர்ந்தான்; போர் அநுபவம் இல்லாத தான் போர் அநுபவம் மிகுந்த அதியமான் மீது போருக்குச் செல்லுதல் வெற்றியைத் தராது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொண்டான். அவன் ஔவையாரது பேச்சுத் திறமையைத் தன்னுள் பாராட்டினுன்; அவர் மனம் மகிழும்படி பல பரிசுகளைத் தந்தான்.

மலையமான்

மலையமான் திருக்கோவலூரை ஆண்டுவந்த மன்னன். அவனது நாடு மலைநாடு. அந்நாட்டில் தென்பெண்ணை ஆறு பாய்கின்றது. அவனது தலை நகரான திருக்கோவலூர் மிக்க வளமுடையது. மலையமான் போர்ப் பயிர்ச்சி மிக்கவன்; சிற்றரசர் பலரை வென்றவன். அம்மன்னன் புலவர்களை ஆதரிப்பதிலும் சிறந்தவன். ஆதலால் புலவர் பலர் அவனைச் சிறப்பித்துப் பல பாடல்களைப் பாடினர். அவன் புகழ் தமிழ் நாட்டில் பரவியது.

ஒரு முறை எக்காரணத்தாலோ மலையமான் தகடூர் நாட்டின்மீது படையெடுத்தான். அதியமான் போரை வரவேற்கும் இயல்புடையவன். ஆதலால் அவன் மிக்க மகிழ்ச்சியோடு மலையமானைத் தாக்கப் போர்க்களம் சென்றுன்.

ஔவையார் அறிவுரை

ஔவையார் அதியமானுடன் போர்க்களத்திற்குச் சென்றுர்; இரண்டு அரசர் படைகளையும் பார்வையிட்டார். அதியமானது படை எண்ணிக்கையில் மிகுந்திருந்தது. மலையமான் போரில் தோற்பது உறுதி என்று ஔவையார் எண்ணிஞர். அவர் மனம் மலையமான்மீது இரக்கம் கொண்டது.

அவர் மலையமானையும் அவன் வீரரையும் நோக்கிக் கீழ்வருமாறு பேசினர் :

"அதியமான் வாட்போரில் வல்லவன். அவனது வாள், அரசர் பலரை வெட்டி வீழ்த்திய சிறப் புடையது. அவ்வாள் ஆயிரக்கணக்கான வீரரின் குருதியில் தோய்ந்தது. அவனுடைய வேல்கள் சிற்ற ரசர் கோட்டைகளை வென்றவை. அவனுடைய யானைகள் போர்புரிவதில் திறமை பெற்றவை. பகைவருடைய கோட்டைக் கதவுகளைக் குத்திக் குத்தி அவற்றின் கொம்புகள் நுனி தேய்ந்தவை. அவன் குதிரைகள் பகை வீரர்களை வீழ்த்தி மிதித் தவை. தகடூர் நாட்டு வீரர் எமனையும் எதிர்க்கும் வலிமை உடையவர். மாமியார் இல்லத்திற்குச் செல்லும் மருமக்கள்போல அவர்கள் போர்க்களத் திற்குப் பெருவிருப்பத்துடன் செல்லும் இயல்புடை யவர்கள். இத்தகைய வீரர்களோடு நீங்கள் போர் புரிந்து வெற்றி காண்பது அருமை; ஆதலால் போர் புரியாமல் உங்கள் நாட்டுக்குத் திரும்புதல் நல்லது. போரினல் உங்கள் நாடு அழியும். வீரர் பலர் வீணே கொல்லப்படுவர். அவர் குடும்பத்தார் பெருந் துன்பம் அடைவர். போர் புரியாமல் நாட்டை நல்ல முறையில் அரசாள்வதே அரசனுக்கு அழகு."

கொடிய போர்

மலையமான் ஔவையாரது அறிவுரையைப் பொருட்படுத்தவில்லை. அதன் விளைவாகப் போர் மூண்டது. போரில் யானைகள் யானைகளைத்தாக்கின; குதிரை வீரர் குதிரைவீரரை எதிர்த்தனர். காலாட் படையினர் காலாட் படையினரோடு போரிட் டனர். போர் வரவரக் கடுமையானது. அதிய மான் வீரர் கடும்போர் புரிந்தனர். யானைகள் வெட்டப்பட்டன. துதிக்கையை இழந்த யானைகள் பெருமுழக்கமிட்டுக்கொண்டு தரையில் சாய்ந்தன. கால்கள் துண்டிக்கப்பட்டுக் குதிரைகள் மண்ணில்

புரண்டன. வீரர்கள் மார்பில் புண்பட்டு மடிந்தனர். சிலர் குற்றுயிராய்க் கிடந்தனர். குருதியாறு பெருக்கெடுத்தது. வெட்டுண்ட யானைகள் மீது நின்று வீரர் சிலர் போரிட்டனர். அதியமான் தன் படைகளின் முன் வரிசையில் காணப்பட்டான். அவன் ஏறியிருந்த குதிரை போர்க்களத்தில் சுழன்று சுழன்று வந்தது. அவன் பிடித்திருந்த வாளுக்கு இரையானவர் பலர்.

நேரம் செல்லச் செல்ல, மலையமான் படை கரைந்துகொண்டே வந்தது. தன் படை தேய்வதைக் கண்ட மலையமான் மிக்க கவலை கொண்டான்; தன் குதிரையைத் தூண்டி அதியமானுக்கு முன்பு சென்றான். அவனைக் கண்ட அதியமான் மிக்க மகிழ்ச்சியோடு வாளை ஓங்கினான். அதியமானும் மலையமானும் வாட்போர் புரிந்தனர். அதியமான் வாட்போர் புரிவதைக் கண்ட அவன் வீரர், பகைவரை இறுதியில் கடுமையாகத் தாக்கினர். மலையமான் தோல்வியுற்றான். அவனது நாடு அதியமான் ஆட்சிக்கு உட்பட்டது. ஔவையார் அவனை மனமாரப் பாராட்டி வாழ்த்தினர். பாட்டில் வல்ல **பரணர்** என்ற புலவர் அவனது வெற்றியைப் பாராட்டிப் பாக்களைப் பாடினார்.

### சேரன் படையெடுப்பு

போரில் தோற்று ஓடிய மலையமான் சேர மன்னனிடம் அடைக்கலம் புகுந்தான். சேர வேந்தன் அதியமானது வெற்றியைக் கேட்டுப் பொறாமை கொண்டான். அவன் அதியமானை அடக்கிவைக்க விரும்பினான். அவ்விருவரும் சேர்ந்து முதலில் கொல்லிமலை நாட்டைத் தாக்கினர். அம்மலை நாட்டை ஆண்டவன் அதியமானுக்கு நண்பன். ஆதலால் அதியமான் தன் நண்பனுக்கு உதவியாகப் போர் புரியச் சென்றான். சோழனும் பாண்டியனும்

அதியமானுடன் சேர்ந்துகொண்டனர். அப்பொழுது நடைபெற்றபோர் கடுமையும் கொடுமையும் வாய்ந்தது. அப்போரில் சேர மன்னன் வெற்றி பெற்ருன். அதியமான் தோற்று ஓடித் தன் கோட்டையுள் புகுந்துகொண்டான்.

ஔவையார் அவனுக்கு ஊக்கத்தை ஊட்ட விரும்பினர். அவர் அவனை நோக்கிப் பின்வருமாறு கூறினர்:

"பெருவீரனே, அரசன் எல்லாப் போர்களிலும் வெற்றி பெறுவது இயலாது. வெற்றியும் தோல்வியும் மாறி மாறி வரும். வெற்றி பெற்ற போது அளவு கடந்த மகிழ்ச்சி அடைதல் தவறு; அவ்வாறே தோல்வி அடைந்த பொழுதும் அளவு கடந்த சோர்வு அடைவது தவறு. நீ வீரத்தில் சிறந்தவன்; ஆதலால் கோட்டையுள் அடைந்து கிடத்தல் இழிவாகும். நீ கோட்டையிலிருந்து வெளிபட்டுப் போர் புரிவதே ஏற்றது; வெற்றியை அல்லது தோல்வியைக் காண்பதே முறை."

**அதியமான் மறைவு**

அதியமான் அந்த அறிவுரைப்படி போர்க்களம் சென்ருன்; தன்னுல் இயன்றவரையில் கடும்போர் புரிந்தான். அவன் மார்பில் பகைவர் விட்ட அம்புகளால் பல புண்கள் உண்டாயின. ஔவையார் அப்புண்களைக் கண்டு மகிழ்ந்தார்; "விழுப்புண் பெற்ற வீரன்" என்று கூறி அவனைப் பாராட்டினர். அதியமான் அப்புண்களைப் பொருட்படுத்தாமல் மேலும் மேலும் போர் புரிந்தான். இறுதியில் சேரன் எறிந்த வேலொன்று அவன் நெஞ்சிற் பாய்ந்தது. சிறந்த வீரனுன அதியமான் உயிர் துறந்தான். ஔவையார், "மார்பில் புண்பட்டு இறப்பதே சிறந்த வீரனுக்கு அழகு. அதியமான் மார்பில் புண்பட்டு இறந்தான். வீரர் உலகம்

அவனைப் பாராட்டி மகிழும்,'' என்று கூறி மகிழ்ச்சிக் கண்ணீர் விட்டார்; அவனுடைய நற்பண்புகளைக் கூறிக்கூறி வருந்தினர்.

மூவேந்தரை வாழ்த்துதல்

ஒளவையார் அதியமான் இறந்த பின்பு ஒரு முறை சோழன் அரண்மனைக்குச் சென்றார்; சோழ மன்னனைச் சந்தித்தார். அப்போது அவன் அரண்மனையில் சேரனும் பாண்டியனும் தங்கி யிருந்தனர். அம்மையார் அம்மூவரும் சேர்ந்து இருந்ததைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார்; அவர்களோடு சிறிது நேரம் உரையாடி இன்புற்றார். இறுதியில் அவர் அவர்களை நோக்கி, ''முடியுடை மூவேந்தர்களே, நீங்கள் மூவரும் ஒற்றுமையோடு இருப்பதைக் காண்கையில் என் உள்ளம் குளிர் கின்றது. நீங்கள் ஒற்றுமையோடு இருக்கும்வரை யில் தமிழகம் பிறர்க்கு அடிமையாகாது. நீங்கள் ஏழைகளுக்கு உதவி செய்யுங்கள்; புலவரைப் போற்றுங்கள்; குடிகள் நன்மையையே உங்கள் நன்மையாக எண்ணுங்கள்; நீங்கள் மூவரும் இன்று போல் என்றும் ஒற்றுமையாக வாழ்ந்து சிறப்பீர் களாக!'' என்று கூறி வாழ்த்தினர்.




# 4. பெருஞ்சித்திரனர்

ஏழைப் புலவர்

**பெருஞ்சித்திரனர்** என்பவர் சங்க காலத்தில் வாழ்ந்த புலவருள் ஒருவர். அவர் இளமையில் நல்ல ஆசிரியர்களை அடுத்துக் கல்வி கற்றூர்; கவிபாடும் திறமையைப் பெற்றூர்; தக்க வயதில் திருமணம் செய்துகொண்டார். அவர் மனைவியார் மிகவும் நல்லவர். அவர் தம் கணவரது குறிப்பு அறிந்து நடந்தார். அவரது வருவாய்க்குத் தக்கபடி சிக்கன மாகக் குடும்பத்தை நடத்தினர். காலப்போக்கில் பிள்ளைகள் பிறந்து வளர்ந்துவந்தனர்.

புலவர் வறுமையால் வாடத் தொடங்கினர். அவர் மனைவியார் வீட்டுக் கொல்லையில் தானுக முளைத்த குப்பைக் கீரையைக் கிள்ளி உப்பில்லாமல் சமைத்தார்; அதனைத் தம் குடும்பத்தாருக்குப் படைத்தார். இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. புலவர் இவ்வளவு துன்ப நிலையிலும் மனம் பொறுத்து வாழ்ந்தார்; மனைவியும் மக்களும் பசியால் வாடுவதைக் கண்டு மனம் பதைத்தார்; எந்த வள்ளலிடம் சென்று உதவி பெறுவது என்று எண்ணி எண்ணிப் பார்த்தார்.

**பாரி** என்பவன் ஒரு வள்ளல். அவன் தன்னைத் தேடிவந்த புலவர்க்கு வாரி வழங்கியவன். பேகன் என்பவன் பழநி மலைநாட்டுத் தலைவன்; மிக்க இரக்க குணம் உடையவன். ஒரு மயில் மகிழ்ச்சியினல் தன் தோகையை விரித்து ஆடிக்கொண்டிருந்தது. பேகன் அது குளிரால் நடுங்கிக்கொண்டிருந்தது என்று தவருக எண்ணினன். உடனே அவன் தன் போர்வையை எடுத்து அதன்மீது போர்த்தான்.

புலவர்கள் அவனது இச்செயலைப் பாராட்டினர். ஆய் என்பவன் பொதியமலை நாட்டுத் தலைவன். அவன் தன் உடைமைகளை எல்லாம் புலவர்க்கும் பாணர்க்கும் கூத்தர்க்கும் வழங்கிப் புகழ் பெற்ருன். நள்ளி என்ற சிற்றரசன் புலவர்களை எங்குக் கண்டாலும் அவர்களுக்குத் தன்ஞல் இயன்ற உதவியைச் செய்துவந்தான். ஓரி என்பவன் கொல்லிமலைத் தலைவன்; படித்த ஏழைகளை ஆதரிப்பதில் பெயர் பெற்றவன். மலையமான் திருமுடிக்காரி என்பவனும் சிறந்த கொடையாளி.

இந்த வள்ளல்கள் அறுவரும் பெருஞ்சித்திரஞருக்கு முன்பே இறந்துவிட்டனர். ஆயினும் இவர்களது புகழ் அவர் காலத்தில் நாடு முழுமையும் பரவியது. புலவர் இந்த வள்ளல்கள் இல்லாமையை நினைந்து வருந்திஞர். அவர் தம் காலத்தில் வாழ்ந்த அதியமானைப் பற்றி எண்ணிஞர்; அவனைப் பார்த்தாவது தன் வறுமையைப் போக்க விரும்பிஞர். புலவர் அந்த எண்ணத்துடன் கொங்கு நாட்டை நோக்கி வழிநடந்தார்; பல நாட்கள் வழிநடந்து இறுதியில் தகடூரை அடைந்தார்.

### அதியமான்

புலவர் வாயிற்காவலன் வாயிலாகத் தாம் வந்திருப்பதை அதியமானுக்கு அறிவித்தார். அதியமான் எக்காரணத்தாலோ அவரை நேரில் வந்து வரவேற்கவில்லை; தம் ஏவலர் மூலம் சில பரிசுப் பொருள்களை அனுப்பிஞன். அதியமான் தன்னை அவமதித்தான் என்று புலவர் எண்ணிஞர்; மிக்க மன வருத்தம் அடைந்தார். அவர் வறுமையால் வாடியவர். ஆயினும் தம்மை மதியாமல் கொடுத்தனுப்பிய பரிசினை அவர் விரும்பவில்லை. அவரது மான உணர்ச்சி தலை தூக்கி நின்றது. அவர், பரிசுப் பொருள்களை எடுத்துவந்த அரண்மனை அலுவலரைப் பார்த்துக் கீழ்வருமாறு கூறிஞர்:

"நான் கொங்கு நாட்டைச் சேர்ந்தவன் அல்லேன்; உங்கள் மன்னனைப் பார்க்கக் குன்றுகளை யும் மலைகளையும் கடந்து வந்தேன். நான் ஒரு புலவன். நான் இத்துணைச் செய்திகளையும் உங்கள் மன்னனுக்குச் சொல்லி அனுப்பினேன். அவன் என்னை உள்ளே அழைக்கவில்லை; என்னைப் பார்த்துப் பேசவுமில்லை; நான் பரிசு மட்டும் பெற வந்தவன் என்று எண்ணினான்போலும்! அவன் என்னைச் சிறிதும் மதிக்கவில்லை; அதனால்தான் இப் பரிசுப் பொருள்களை உங்களிடம் கொடுத்தனுப்பி னான். அவன் என்னை அழைத்திருக்க வேண்டும்; என்னோடு பேசி எனது தமிழறிவை அறிந்திருக்க வேண்டும். அதன் பின்பு அவன் சிறிதளவு பரிசு கொடுத்திருப்பினும் நான் மிக்க மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டிருப்பேன். உங்கள் மன்னன் என்னை அவமதித்துவிட்டான். அவனது செயல் மிக்க இழிவானது. இப்பரிசுப் பொருள்களை அவனிடமே கொடுத்துவிடுங்கள்."

இளவெளிமான்

வெளிமான் என்பவன் ஒரு சிற்றரசன். அவன் புலவர்களுக்குப் பொருள் வழங்கினான்; பாணரைப் பாராட்டினான்; கூத்தர்களையும் ஆதரித்தான். இதனைக் கேள்வியுற்ற பெருஞ்சித்திரனார் அவ் வள்ளலைக் காணச் சென்றார். அவர் சென்ற பொழுது அவ்வள்ளல் நோய்வாய்ப்பட்டு இறக்கும் நிலையில் இருந்தான். அந்த நிலையிலும் அவன் புலவரைக் கண்டு இனிய முகத்துடன் பேசினான்; தன் தம்பியாகிய இளவெளிமானுக்குப் புலவரை அறிமுகப்படுத்தினான். அவ்வளவில் அவன் உயிர் பிரிந்தது.

புலவர் அங்குச் சில நாள் தங்கித் தாம் தேடி வந்த வள்ளல் மறைந்ததை எண்ணி எண்ணி மனம் வருந்தினார்; சில நாட்களுக்குப் பின்பு இளவெளி

மானைச் சந்தித்தார். அவன் புலவர் மதிப்பை உணராதவன்; அவர் மனம் மகிழும்படி பரிசு கொடுக்க அறியாதவன்; ஆதலால் மிகக் குறைந்த அளவில் பரிசு கொடுத்தான். பெருந்தொகையை எதிர்பார்த்து வந்த புலவருக்கு அப்பரிசு ஏமாற்றத்தைத் தந்தது. அதனால் அவர் அதை வாங்கிக் கொள்ளவில்லை. அவர் மனம் புண்பட்டது. அதியமான் அவரை மதிக்கவில்லை. இளவெளிமானும் அவரை மதிக்கவில்லை. இதனை எண்ண எண்ண அவர் உள்ளம் நொந்தது. அவர் தமது மனத்தைச் நோக்கிச் சொல்பவரைப்போல இளவெளிமான் முன்னிலையில் கீழ்வருமாறு கூறினார் :

"பாலைவனத்தில் நிழலைத்தரும் மரம் போல வெளிமான் என்போன்ற ஏழைப் புலவர்களுக்கு உதவி செய்து புகழ் பெற்றான்; என் போதாத காலம் இறந்தான். அவன் இறந்ததால் அவன் மனைவியர் துன்புறுகின்றனர். என் போன்ற ஏழையர் வருந்துகின்றனர். புலி தனக்கு இரையாக யானையை மதிக்கும்; தனக்கு இரையாவதற்குப் போதாத எலியைக் கொல்லாது. அது போலத் தகுதி இல்லாத இப்பரிசை நான் பெற்றுக் கொள்ளமாட்டேன். மனமே, நாம் வேறு ஒரு வள்ளலைத் தேடிச் செல்வோம். விருப்பம் இல்லாமல் ஒருவர் தரும் பரிசு நமக்குத் தேவை இல்லை. 'வந்தது வரட்டும்' என்று எண்ணும் மானவுணர்ச்சி இல்லாதவரே இப்பரிசைப் பெற விரும்புவர். நம் தமிழறிவை மதித்தும் நம் வறுமைக்கு இரங்கியும் பரிசு கொடுக்கும் நல்லவர் பலர் இந்த நாட்டில் உண்டு. நாம் அவர்களை நோக்கிச் செல்வோம்."

**குமண வள்ளல்**

இவ்வாறு பேசிப் புறப்பட்ட புலவர் மிக்க மன வருத்தத்துடன் வழி நடந்தார்; வழியில் குமண வள்ளலைப்பற்றிக் கேள்வியுற்றார்; அவனது நாட்டை

நோக்கி நடந்தார்; பாவம்! அவர் மனம் படாத பாடு பட்டது. அவர் அது வரையில் சென்ற இடங் களில் சிறுமையையே அடைந்தவர்; "குமணன் சிறந்த வள்ளல் என்று எல்லோரும் பாராட்டு கின்றனர். ஆயினும் அவன் நம்மிடம் எப்படி நடந்துகொள்வானோ! நமது தீவினை நம்மை விட்டுப் போகவில்லையே! அத்தீவினை நாம் செல்லும் இடங்களுக்கெல்லாம் தொடர்ந்து வந்து துன் புறுத்துகின்றதே!' என்று எண்ணி எண்ணி வருந்தினர்.

பெருஞ்சித்திரனர் இவ்வாறு பெருங்கவலை கொண்டவராய் வழிநடந்து குமணனது அரண்மனை வாயிலை அடைந்தார். வாயிற் காவலர் அவரது வருகையைக் குமணனுக்கு அறிவித்தனர். உடனே அவ்வள்ளல் அரண்மனை வாயிலை அடைந்தான்; மலர்ந்த முகத்துடன் அவரை வரவேற்றான். அரண் மனைப் பணிமக்கள் புலவரை நீராட்டுவித்தனர்; உயர்ந்த உடைகளைக் கொடுத்தனர்; அறுசுவை உண்டியை வழங்கினர். அப்பொழுது குமணனே எதிரில் நின்று அவரை உண்பித்தான். புலவர் மனம் பெருமகிழ்ச்சி அடைந்தது. தாம் சென்ற இரண்டு இடங்களிலும் துன்புற்ற புலவர் குமணன் அரண் மனையில் இன்புற்றார்.

குமணன் புலவரை அன்புடன் நோக்கி, "புலவர் பெருமானே, உமது வழிநடை வருத்தம் தீர ஓய்வு கொள்வது நல்லது. நாம் மாலையில் பேசி மகிழ் வோம்" என்று கூறினன். உடனே அரண்மனை ஏவலர் அவரை விருந்தினர் மாளிகைக்கு அழைத்துச் சென்றனர். அங்கு விரிக்கப்பட்டிருந்த மெத்தை ஒன்றில் புலவர் படுத்தார்; உறக்கத்தில் ஆழ்ந்தார்.

மாலைச் சிற்றுண்டிக்குப் பின்பு புலவர் குமணனைக் கண்டார். குமண வள்ளல் அவரது குடும் பத்தைப் பற்றிய விவரங்களைக் கேட்டான். அது

தான் தக்க சமயம் என்று எண்ணிய புலவர் பின் வருமாறு பேசினர்:

"பெருமானே, புலவர் வறுமையைப் போக்கி வந்த பாரி முதலிய வள்ளல்கள் இவ்வுலகத்தை விட்டு அகன்றனர். நீ அப்புலவர்களின் வருத்தத்தை உன் வருத்தமாக நினைத்து, அவர்களுக்கு உதவி புரிகின்றாய் என்று கேள்விப்பட்டேன். அதற்குத் தகுந்தாற்போல எனது வறுமை உன்னிடம் அழைத்து வந்தது. நான் உன்னைக்காண நேர்ந்தமைபற்றி மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். பெரும, எனது குடும்ப நிலையைக் கூறுவேன், கேட்பாயாக:

"என் தாயார் வயது முதிர்ந்தவர். அவர் கோலூன்றி நடக்கின்றார்; 'எனது உயிர் இன்னும் போகவில்லையே!' என்று சொல்லிக்கொண்டு துன்பப்படுகிறார். அவரது கண் ஒளியும் மழுங்கி விட்டது. என் மனைவி மிகவும் நல்லவள்; ஆயினும் பசியினால் மெலிந்துவிட்டாள். குழந்தைக்குக் கொடுக்க அவளிடம் பால் இல்லை. அவள் வீட்டுக் கொல்லையில் தானே முளைத்த கீரையைப் பறித்து வந்து உப்பில்லாமல் வேகவைத்துப் படைத்தாள். நானும் மற்றவரும் அதனை உண்டோம். அவளது ஆடை அழுக்குப் படிந்துள்ளது. பிள்ளைகள் உணவு இல்லாமல் வருந்துகின்றனர். நான் இந்த வறிய நிலையில் உன்னைத் தேடி வந்திருக்கிறேன். நீ மகிழ்ச்சியோடு தருவது தினை அளவாக இருப்பினும், உனது பெருந்தன்மையை எண்ணி அதனைப் பனையளவாக மதித்து மகிழ்வேன்.

"உனது அரண்மனையில் சுவையுள்ள உணவுப் பொருள்கள் ஆக்கப்படுகின்றன. நீ அவற்றைப் புலவர் பெருமக்களுடன் அமர்ந்து நாளும் உண்ணுகின்றாய்; அப்புலவர்களுக்கு நல்ல ஆடைகளையும் நகைகளையும் பிற பொருள்களையும் கொடுத்து மகிழ்கின்றாய். நீ இவ்வாறு கற்ற பெருமக்களை உபசரிப்பதால் உன் புகழ் தமிழகம் முழுமையும்

பரவியுள்ளது. ஐயனே, நீ எனக்குக் கொடுக்கும் செல்வத்தைக் கொண்டு என் குடும்பத்தார் எல்லை யற்ற மகிழ்ச்சி அடைவர் என்று நம்புகின்றேன். மழை பெய்யாத கோடைக்காலத்தில் நீ கங்கை ஆருக விளங்குகின்ருய்; ஏழைகளைக் காப்பதையே உனது கடமையாகக் கொண்டுள்ளாய். புலவர்கள் உன் உயர்ந்த பண்புகளை எண்ணி எண்ணி மகிழ் கின்றனர். யான் எனது ஊருக்கு யானைமீது செல்ல விரும்புகிறேன். என் குடும்பத்தார் அதனைக்கண்டு வியப்பு அடைவர். நீ தரும் பரிசிலையும் யானை யையும் பார்த்துப் பார்த்து உன்னை மனமாரப் பாராட்டுவர்.''

குமண வள்ளல் புலவர் கூறியவற்றை எல்லாம் பொறுமையோடு கேட்டான்; அவரது குடும்ப நிலையை அறிந்து மனம் இரங்கினுன்; அவரது வறுமையை அடியோடு விரட்டத் துணிந்தான்; பெருஞ் செல்வத்தையும் உயர்ந்த ஆடைகளையும் வழங்கினுன்; அவர் விரும்பியபடியே யானை ஒன்றையும் கொடுத்தான். புலவர் யானையையும், பிற பரிசுப்பொருள்களையும் வியப்புடன் பார்த்தார்; மகிழ்ச்சிக் கண்ணீர் சிந்தினுர்; குமணனை மார் போடு தழுவிக்கொண்டார். அவரது உள்ளம் குளிர்ந்ததைக் கண்டு குமணன் களிப்படைந்தான்; ''நீர் இங்கு அடிக்கடி வரவேண்டும்,'' என்று கூறிப் புலவரை யானைமீது ஏற்றி வழி அனுப்பினுன்.

## இளவெளிமானுக்கு அறிவுரை

புலவர் குமணனை வாழ்த்திக்கொண்டே யானை மீது சென்றுகொண்டிருந்தார். யானை சென்ற வழியில் இளவெளிமான் ஊர் அமைந்திருந்தது. முன்பு அவன் புலவரை மதியாது நடந்துகொண் டவன். ஆதலால், புலவர் அவனுக்கு அறிவுறை கூற விரும்பினுர். அவன் இனியாவது புலவர்களை மதிக்க வேண்டும் என்பது அவர் ஆவல். அப்

புலவர், அரண்மனைக்கு அருகில் இருந்த அவனது காவல் மரத்தில் தம் யானையைக் கட்டினார்; தம் பரிசுப் பொருள்களுடன் அரண்மனையுள் சென்றார்; இளவெளிமானைக் கண்டார்; தாம் பெற்று வந்த பரிசுப் பொருள்களை அவனுக்குக் காட்டினார். பின்பு அவர் அவனை நோக்கி, ''ஐயனே, ஏழைகளுக்கு



உதவி செய்பவன் நீ ஒருவன் மட்டுமே அல்லன்; மிகப் பலர் இருக்கின்றனர். என் போன்ற புலவரை மதித்து இவ்வாறு பரிசுப் பொருள்களைத் தரும் நல்லவர்கள் இந்நாட்டில் இருக்கிறார்கள் என்பதை நீ அறிவது நல்லது. நான் பரிசாகப் பெற்ற யானை உனது காவல் மரத்தில் கட்டப்பட்டுள்ளது. பெருமானே, யான் விடைபெறுகிறேன்'', என்று கூறி வெளியில் வந்தார்; யானைமீது அமர்ந்து தம் ஊர் நோக்கிச் சென்றார்.

ஒவ்வோர் அரசனுக்கும் அக்காலத்தில் காவல் மரம் ஒன்று இருந்தது. அக்காவல் மரம் இக்காலத்து நாட்டுக் கொடியைப் போன்ற மதிப்புடையது. ஒரு

நாட்டின்மீது படையெடுக்கும் பகைவன் முதலில் அந்த மரத்தை வெட்டுவான். அச்செயல் அம்மரத்துக்குரிய அரசனை அவமானப்படுத்துவதாகும். புலவர் அத்தகைய மதிப்புவாய்ந்த காவல் மரத்தில் தமது யானையைக் கட்டினுர். இச்செயல் அவரது அஞ்சாமைக்குச் சிறந்த சான்ருகும்.

தமக்கென வாழாதவர்

பெருஞ்சித்திரனுர் யானைமீது வந்ததைக்கண்டு அவர் ஊரார் அளவு கடந்த வியப்பு அடைந்தனர். உணவு இல்லாமல் வாடிக் கிடந்த அவர் குடும்பத்தார் முகங்கள் புலவரது வருகையைக் கண்டதும் தாமரை மலர்களைப்போல மலர்ந்தன. புலவர் யானையை விட்டுக் கீழிறங்கியதும் தம் முதிய தாயாரைப் பணிந்தார்; மனைவியையும் மக்களையும் தழுவினுர்; தாம் கொண்டுவந்த பரிசுப்பொருள்களை அவர்களுக்குக் காட்டினுர். அவர்கள் அவற்றைப் பார்த்து ஓவியங்கள்போல் அசைவற்று நின்றனர். பின்பு புலவர் தம் மனைவியை நோக்கி, ''குமண வள்ளல் கொடுத்துள்ள செல்வத்தைக் கொண்டு நாம் மட்டும் வாழ்வது நல்லதன்று. ஆதலால் நம் போன்ற ஏழைகளுக்கு வழங்குவது நல்லது நீ உனக்குக் கடன் கொடுத்தவருக்கும் உன் உறவினருக்கும் இச்செல்வத்தில் ஒரு பகுதியைக் கொடு. இதுபற்றி என்னைக் கேட்க வேண்டுவதில்லை. 'இவர் உதவி பெறத்தக்கவர்' என்று நீ நினைப்பவர்களுக்கு உதவி செய்,'' என்று மகிழ்ச்சியோடு கூறினுர்.

புலவர் பலகாலம் வறுமையில் வாடியவர். அப்படி இருந்தும், அவர் குமணனிடம் பெற்ற செல்வத்தைத் தாமே அநுபவிக்க வேண்டும் என்று எண்ணவில்லை; தம்மைப்போன்ற ஏழைகளுக்குக் கொடுத்து உதவ விரும்பினுர்; பிறர்க்கு உதவி செய்யும்படி தம் மனைவியாரைத் தூண்டினுர். அப்புலவர் பெருமானது பெருந்தன்மையை என்னென்பது!

# 5. பெருந்தலைச் சாத்தனார்

## ஆவூர் மூலங்கிழார்

ஆவூர் என்பது சோழ நாட்டைச் சேர்ந்தது. அவ்வூரில் நீர்வளம் மிகுதி. அதனால் அவ்வூரைச் சேர்ந்த நிலங்கள் மிக்க விளைச்சலைக் கொடுத்தன. அவ்வூரில் வாழைத் தோட்டங்களும், தென்னந் தோப்புகளும், மாஞ்சோலைகளும் இருந்தன. அவ் வூர்ப் பெருமக்களுள் மூலங்கிழார் என்பவர் ஒருவர். அவர் கல்வி கேள்விகளில் சிறந்தவர்; கவிபாடும் ஆற்றல் பெற்றவர்; ஒழுக்கத்தால் உயர்ந்தவர்.

அவர் மனைவியார் கணவரைத் தெய்வம் போல மதித்தவர்; தம் வீடு தேடிவந்த உறவினரிடமும் விருந்தினரிடமும் மிக்க அன்புடன் பழகினார். அவர் எப்பொழுதும் இனிய முகத்துடன் விளங்கினார்; இனிய சொற்களையே பேசினார். இத்தகைய நல்ல பண்புகளைக்கண்டு, அனைவரும் அந்த அம்மை யாரைப் பாராட்டினர்.

மூலங்கிழார் செல்வர் அல்லர். ஆதலால் அவர் பொருள் தரத்தக்க வள்ளல்களை நாடிச் சென்றார்; அவர்களைப் பாராட்டிச் செய்யுட்களைப் பாடினார்; அவ் வள்ளல்கள் தந்த பொருள்களைக் கொண்டுவந்து வாழ்க்கை நடத்தினார் அவர் எளியவர் ஆயினும், தம்மிடம் பொருள் இருந்த பொழுது அதனைப் பிறர்க்கு உதவினார்; விருந் தினரை உண்பித்தார். ஊரார் இந்த நல்ல பண்பு களைக் கண்டு அவரைப் பாராட்டி மகிழ்ந்தனர்.

## பெருந்தலைச் சாத்தனார்

ஆவூர் மூலங்கிழாரும் அவர் மனைவியாரும் நெடுநாள் பிள்ளைப் பேறு இன்றி வருந்தினர். பின்பு

இறைவன் திருவருளால் அவர்களுக்கு ஓர் ஆண் மகவு பிறந்தது. பெற்றோர் அம்மகவுக்குப் பெருந் தலைச் சாத்தன் என்று பெயரிட்டனர். பெற்றோர் ஏழைகள் ஆயினும் தமது ஒரே குழந்தையைத் தம் உயிரினும் மேலாக மதித்து வளர்த்தனர். அக் குழந்தை நடை கற்கத் தொடங்கியது; மழலைச் சொற்களைப் பேசியது; தன் சிறிய கைகளை நீட்டிப் பெற்றோர் உணவைப் பிசைந்தது; அதனை எடுத்துச் சிந்தியது; தானும் சிறிது உண்டது. குழந்தையின் இத்தகைய செயல்கள் பெற்றோர்க்கு இன்பத்தை உண்டாக்கின. அவர்களுக்கு அதன் மழலைச் சொற்கள் யாழோசையைவிட இனிமையாய்த் தோன்றின. அவர்கள் அக்குழந்தையைத் தொட்டி லில் இட்டு ஆட்டினர்; சில சமயங்களில் தத்தம் மார்பின்மீதும் தோள்மீதும் வைத்துக்கொண் டனர். தாயார் இனிய தாலாட்டுப் பாடல்களைப் பாடி அக்குழந்தையை உறங்கும்படி செய்தார்.

பெற்றோர் இவ்வாறு உணர்ச்சியுடனும் ஊக்கத் துடனும் அக்குழந்தையை வளர்த்தனர். பெருந் தலைச் சாத்தனார் ஐந்து வயதுடைய சிறுவரானார். மூலங்கிழார் தம் மைந்தருக்குத்தாமே கல்வி கற்பித் தார். அக்கால நூல்கள் பனை ஏடுகளில் எழுத்தாணி கொண்டு எழுதப்பட்டவை. சாத்தனார் பதினைந்து ஆண்டுகளுள் தமிழ் இலக்கண நூல்களையும், செய் யுள் நூல்களையும் உழைத்துப் படித்தார். அவர் கவிபாடும் திறமையைப் பெற்று விளங்கினார்.

மூலங்கிழார் தம் தவமைந்தருக்குத் திருமணம் செய்வித்தார். சில ஆண்டுகளுக்குப் பின்பு மூலங் கிழாரும் அவர் மனைவியாரும் காலமாயினர். சாத் தனார் தாமே முயன்று பொருள்தேட வேண்டியவ ரானார். அப்பொழுது அவருக்குப் பிள்ளைகள் சிலர் இருந்தனர். அவருடைய மனைவியார் குணங்களால் உயர்ந்தவர்; தம் மாமியாரைப் போலவே அனைவரி

டமும் நல்ல பெயர் பெற்ருர்; தம் கணவருக்கு அவ்வப்போது கிடைத்த பரிசுப்பொருளை வைத்துக் கொண்டு மிக்க சிக்கனமாகச் செலவு செய்து குடும்பத்தை நடத்தினுர்.

புலவர் புறப்பாடு

சாத்தனுர் அறிவு மிக்கவர். அவர் கல்வி அறிவு இல்லாத பலர் செல்வத்தோடு வாழ்வதைக் கண்டார்; கல்வி அறிவு உடையவர் பலர் செல்வம் இல்லாமல் தவிப்பதையும் பார்த்தார்; இது பற்றிப் பலவாறு எண்ணினுர். அவர் ஒரு நாள் தம் ஊரை விட்டுப் புறப்பட்டார்; தம் மனம் போனவாறு நடந்தார். அவர் ஒரு நாள் நெடுவழியில் நடந்து சென்ற பொழுது புலவர் ஒருவரைக் கண்டார். அப்புலவர் ஒரு யானைமீது அமர்ந்து வந்துகொண்டிருந்தார். அவர் முகம் மலர்ந்து காணப்பட்டது. யானை முதுகின்மீது பல மூட்டைகள் இருந்தன. சாத்தனுர் அவரை நோக்கி வணங்கினுர். அவர் உடனே கீழிறங்கி வந்தார்; சாத்தனுரை மார்புறத் தழுவிக் கொண்டார். "புலவரே, யான் கொங்கு நாட்டிலிருந்து வருகிறேன். அங்குக் குமணன் என்று ஒரு வள்ளல் உள்ளான். அப்பெருமகன் புலவரை ஆதரிப்பதில் சிறந்தவன். அவன் எனக்குப் பல பரிசுகள் வழங்கினுன். அவற்றுள் இந்த யானையும் ஒன்ருகும். நீர் அவனிடம் செல்லும். அவன் உமது வறுமையைப் போக்குவான்," என்று கூறினுர்.

குமண வள்ளல்

கோயம்புத்தூர் மாவட்டத்தில் மலைகள் பலவாகும். அம்மலைகளுள் முதிரமலை என்பது ஒன்று. குமணன் என்பவன் அம்மலையைச் சூழ்ந்த நாட்டை ஆண்டுவந்தான். அவன் தன் தாய் மொழியாகிய தமிழில் மிக்க பற்றுடையவன்; ஆதலால் அம்மொழியில் வல்ல புலவரைத் தேவர்களைப் போல மதித்தான்; அவர்கள் விரும்பியவாறு பரிசுகள்

வழங்கினுன். அவனது அறச் செயலால் உண்டான புகழ் நாடு முழுமையும் பரவியது.

அவன் பின்னேன் இளங்குமணன் எனப்பட்டான். அவன் நல்லவர் நட்பு இல்லாதவன். புறங்கூறுதல், பொருமைப்படுதல் முதலிய தீய பண்புகளை உடையவர் அவனுக்கு நண்பராய் இருந்தனர். அவர் இளங்குமணனை நோக்கி, ''ஐயனே, உன் தமையன் மிகவும் நல்லவன். ஆயினும் அவன் செய்யுள் பாடும் புலவர்க்கும், இசையில் வல்ல பாணர்க்கும், நடனத்தில் வல்ல கூத்தர்க்கும் அரசாங்க பணத்தை வாரி வாரி வழங்குகிருன். இது தொடருமாயின், காலப் போக்கில் அரசாங்கத்தில் பணம் இராது. அவனுக்குப் பிள்ளை இல்லை. ஆதலால் அவனுக்குப் பின்பு நீயே இந்த நாட்டை ஆளவேண்டும். அரசாங்கத்தில் பணம் இல்லாமல் நாட்டை ஆள்வது எப்படி? நீ இதனை நன்கு நினைத்துப் பார்க்க வேண்டும்,'' என்று அடிக்கடி கூறிவந்தனர். இளங்குமணன் அத்தீயவர் நட்பால் தன் அறிவை இழந்தான்; தன் நண்பர் கூறியதைக் குமணனிடம் பலமுறை கூறினுன். குமணன் அவன் கூறியதைப் பொறுமையோடும் புன்சிரிப்போடும் கேட்டுக் கொண்டான். ஆயினும் அவன் தன் வழக்கம் போலப் புலவரையும் பாணரையும் கூத்தரையும் சிறப்பித்துவந்தான். தமையனது இச் செயலால் தம்பி சினம் கொண்டான்; அவனைக் கொன்று ஆட்சியைக் கைப்பற்றத் துணிந்தான்.

குமணன் தம்பியின் முடிவை ஒற்றரால் உணர்ந்தான்; ஒரு நாள் இரவு தன் அரசைத் துறந்து காட்டிற்குச் சென்ருன். அரசன் எங்குச் சென்ருன் என்று இளங்குமணனுக்குத் தெரியவில்லை. அவன் உடனே ஆட்சியைக் கைப்பற்றினுன்; தன் தீய நண்பரை அமைச்சராகவும் உயர் அலுவலராகவும் அமர்த்தினுன்.

குமணன் எங்குச் சென்ருன் என்பது அவனுடைய உண்மை நண்பர்களுக்கு மட்டுமே தெரிந்திருந்தது. அவர்கள் நாள்தோறும் அவனுக்கு உணவை அனுப்பிக்கொண்டிருந்தனர். குமணன் இருந்த காடு மரங்கள் நிறைந்தது. அக்காட்டை அடுத்துப் பெரிய மலை ஒன்று இருந்தது. அதனில் குகைகள் பல இருந்தன. குமணன் பகற்காலத்தை அக்காட்டில் கழித்தான்; இரவு நேரத்தை ஒருகுகையில் கழித்தான். இவ்வாறு நாட்கள் பல சென்றன.

சாத்தனரும் குமணனும்

சாத்தனர், புலவர் ஒருவர் கூறியபடி நடந்து நடந்து குமணனது ஊரைச் சேர்ந்தார்; அவ்வூரில் குமணன் இல்லை என்பதைக் கேள்வியுற்ருர்; முதியவர் ஒருவரைக் கண்டு தாம் வந்த காரணத்தைக் கூறினர். அம்முதியவர் புலவர்மீது இரக்கம் கொண்டார். அவர் புலவரை நோக்கி, ''புலவரே, புலி இருந்த அரியணையில் இப்பொழுது எலி இருக்கின்றது. புலி போன்ற குமணன் அரசைத் துறந்து காட்டில் வாழ்கின்ருன். எலி போன்ற இளங்குமணன் இன்று நாட்டை ஆள்கின்ருன். அக்கொடியவன் அத்துடன் நிற்கவில்லை; தன் அண்ணன் தலையைக் கொண்டுவருபவர்க்குப் பெருஞ் செல்வம் கொடுப்பதாகக் கூறியுள்ளான்,'' என்று கூறினர். அப்பெரியவர் குமணன் இருந்த இடத்தையும் அவருக்குக் கூறினர்.

சாத்தனர் அப்பெரியவருக்கு நன்றி கூறிப் புறப்பட்டார்; வழியில் பல துன்பங்களை அடைந்து, இறுதியில் குமணன் இருந்த காட்டை அடைந்தார்; அக்காட்டில் பல இடங்களில் அலைந்து திரிந்தார்; முடிவில் குமண வள்ளலைக் கண்டார். சாத்தனர் தம்மை நோக்கி வருவதைக் கண்ட குமணன், அவர் ஒரு புலவராய் இருத்தல் கூடும் என்று எண்ணினன். அப்புலவர் அவனை நெருங்கியதும் கைகுவித்து

வணங்கினார். குமணனும் அவரை முகமலர்ச்சி யோடு பார்த்து வணங்கி வரவேற்றான். அவ்விருவரும் ஓரிடத்தில் அமர்ந்தனர்.

குமணன் புலவரை நோக்கி, "ஐயனே, நீர் மிக்க துன்பப்பட்டு இக்காட்டுக்கு வந்திருக்கிறீர். உமது வரவு நல்வரவு ஆகுக," என்று கூறினான். அது கேட்ட புலவர், "பெருமானே, யான் அரும்பாடு பட்டுத்தான் இங்கு வந்தேன்; உனது தலை நகரத்திற்கு வந்தேன்; நீ அங்கு இல்லை என்பதை அறிந்து வருந்தினேன்; பின்பு நீ இருக்கும் இடத்தைக் கேட்டு அறிந்தேன்; உன்னைக் காணவேண்டும் என்ற ஆவலினால் இங்கு வந்தேன். உன்னைக் கண்டதும் மகிழ்ச்சி உண்டாகிறது; ஆயினும் நீ இருக்கும் நிலையைக் காண மனம் புண்படுகிறது," என்று உருக்கமாக உரைத்தார். அவர் மேலும் குமணனை நோக்கித் தமது எளிய நிலையைக் கீழ் வருமாறு விளக்கினார்:

"அரசே, நான் சோற்று வளம் மிகுந்த சோழ நாட்டில் பிறந்தவன்; ஆயினும் வறுமையால் வாடுகின்றேன். எனக்கு மனைவியும் மக்களும் உள்ளனர். என் வீட்டார் சமையல் செய்து பல நாட்கள் ஆகி விட்டன. ஆதலால் அடுப்பில் காளான் பூத்துக் கிடக்கிறது. என் மனைவியின் உடல் மெலிந்து விட்டது. அவளது மார்பில் பால் இல்லை. அதனால் என் குழந்தை ஒரு நாள் தாய் முகம் நோக்கி அழுதது. அத்தாய் என்முகம் நோக்கி அழுதாள். நான் நின்முகம் நோக்கி ஓடிவந்தேன். நீயோ, ஆட்சியை விட்டுக் காட்டில் துன்பப்படுகிறாய். நான் உன்னுடைய துன்ப நிலையைப் பார்த்து வருந்துகின்றேன்."

குமணன் உள்ளம் மிகவும் மென்மையானது. அதனால் அவன் புலவரது குடும்ப நிலையைக் கேட்டுக் கண்ணீர் விட்டான்; உடனே எழுந்து எதனையோ

எண்ணிக்கொண்டு உலாவினுன்; பின்பு புலவரை நோக்கினுன். அவன் முகம் மலர்ந்து இருந்தது. அவ்வள்ளல் புலவரைப் பார்த்துக் கீழ்வருமாறு கூறினுன்: ''புலவர் பெருமானே, நான் அரசனுய் இருந்த பொழுது புலவர் பலருக்குப் பொருளுதவி செய்தேன். நீர் அந்த நாளில் வந்திருந்தால் உமது வறுமையை விரட்டியிருப்பேன். நான் அரசைத் துறந்து கையில் காசு இல்லாமல இக்காட்டில் மறைந்து வாழ்கிறேன். நீர் இந்தத் துன்ப நிலையில்



என்னைக் காண வந்தீர். எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. நீர் நான் கூறுவது போலச் செய் யின், உமது வறுமை ஒழியும். என் தம்பி இளங் குமணன் என் தலையைக் கொண்டுவருபவர்க்குப் பெரும் பொருள் கொடுப்பதாகப் பறையறைந் தான் என்று கேள்விப்பட்டேன். நீர் என் தலையை அரிந்து எடுத்துச் சென்று அவனிடம் காட்டும். அவன் பெரும் பொருள் தருவான். நீர் அதனைக்

கொண்டு வசதியாக வாழலாம்.'' அவன் இவ்வாறு சொல்லிக்கொண்டே தனது வாளைப் புலவர் கையில் கொடுத்தான்.

குமணன் கூறியது புலவரைத் திடுக்கிடச் செய்தது. வாளைப் பிடித்திருந்த அவர் கைகள் நடுங்கின. அவர் குமணனது ஒப்பற்ற பெருந்தன்மையை எண்ணி எண்ணிக் கண்ணீர் விட்டார். அப்பொழுது அவருக்கு ஒருயோசனை தோன்றியது. அவர் உடனே அங்கு நில்லாமல் நகரை நோக்கி ஓடினார். அவர் ஓடுவதைக் கண்டு ஒன்றும் தோன்றாமல் குமணன் விழித்தான்.

புலவர் முயற்சி

புலவர் குமணன் தந்த வாளுடன் அரண்மனையை அடைந்தார்; இளங் குமணனைக் கண்டு பணிந்தார். அவன் அவரையும் வாளையும் பார்த்தான்; ஒன்றும் புரியாது விழித்தான். அப்பொழுது புலவர் அவனை நோக்கிப் பின்வருமாறு பேசினார்:

''மன்னவா, நான் சோழ நாட்டுப் புலவன்; உன் தமையனைக் கண்டு உதவிபெற வந்தேன்; அவன் காட்டில் இருப்பதை அறிந்தேன்; அங்குப் பல இடங்களிலும் அலைந்து, இறுதியில் அவனைச் சந்தித்தேன்; எனது ஏழ்மை நிலையை அவனுக்கு விளக்கினேன். காட்டில் மறைந்து வாழும் அந்தத் துன்ப நிலையிலும் அவனது இரக்க உணர்ச்சி மறையவில்லை. அப் பெருமான் இந்த வாளை என் கையில் கொடுத்தான்; 'என் தலையை வெட்டிக் கொண்டு வருபவர்க்குப் பெரும்பொருள் கொடுப்பதாக என் தம்பி வாக்களித்துள்ளான். ஆதலால் நீர் இவ்வாளைக் கொண்டு என் தலையை அரிந்து எடுத்துச் செல்லும்' என்று மகிழ்ச்சியோடு கூறினான். அறிவுடைய எவன்தான் அப்பெருமகனைக் கொல்வான்? நான் அவன் கொடுத்த வாளோடு உன்னைக் காண ஓடிவந்தேன்.

“பெருமானே, உன் அண்ணன் தமிழ் நாடு போற்றும் வள்ளல்; ஏழைகளுக்கு உதவி புரியும் இரக்க மனம் உள்ளவன்; குடிகளைப் பாதுகாக்கும் கொற்றவன்; அப் பெருமகன் மேலும் பல ஆண்டுகள் வாழ்வானாயின், நாடு நலம்பெறும்; ஏழைகளின் வாழ்வும் சிறப்பு அடையும். நீ அவனுக்குத் தம்பி. ஆதலால், உன்னிடமும் நற்பண்புகள் இருக்கும் என்று உறுதியாக நம்புகிறேன். குமணன் நாடு போற்றும் நல்லவன். அவன் தம்பியாகிய நீயும் நல்லவன் என்றே நான் நம்புகிறேன். அப்பெருந்தகையை அழைத்து வந்து பழையபடி ஆட்சி புரியச் செய்வதே உனது கடமையாகும். ஐயனே, நல்லவன் நாட்டில் வாழ்வது நல்லதா? காட்டில் மறைந்து வாழ்வது நல்லதா? அறிவிற் சிறந்த உனக்கு நான் மேலும் கூறுவது முறையன்று.”

முயற்சி வென்றது

சாத்தனாரது பேச்சைக் கேட்கக் கேட்க, இளங்குமணன் தன் அண்ணன்மீது அன்பு கொண்டான்; உடனே அவனைக் காணவேண்டும் என்று துடித்தான். அவன் புலவருடன் காட்டுக்கு விரைந்து சென்றான்; தன் தமையனைக்கண்டு அவன் அடிகளில் விழுந்தான்; கதறி அழுதான்; தான் செய்த குற்றத்தைப் பொறுக்கும்படி வேண்டினான். குமணனும் கண்ணீர் சிந்தினான்; தன் தம்பியை மார்போடு தழுவிக்கொண்டான். புலவர் அக்காட்சியைக் கண்டு மகிழ்ச்சிக் கண்ணீர் பெருக்கினார்.

இளங்குமணன் மனம் மாறித் தன் அண்ணனையே மன்னன் ஆக்கினான். அவன் அன்று முதல் குமணனுக்கு உதவியாய் இருந்து ஆட்சியைக் கவனிக்கலானான். புலவர் சில நாள் அவர்களுடன் இருந்தார். குமணன் புலவருக்குப் பெருஞ் செல்வத்தை வழங்கினான். புலவர் அவன் கொடுத்த யானைமீது அமர்ந்து, தம் நாடு நோக்கிச் சென்றார்.

குமணனுடைய குடிமக்கள் புலவரை வாயார வாழ்த்தினர்.

கோடைமலைத் தலைவன்

பாண்டிய நாட்டு மலைகளுள் கோடைமலை ஒன்று. அது பழநி மலைத்தொடரைச் சேர்ந்தது. அம்மலை இக்காலத்தில் கோடைக்கானல் மலை என்று சொல்லப்படுகின்றது. அது மிக்க உயர மானது. மேகங்கள் அதன்மீது படிந்திருக்கும். அம் மலையில் மேடுகளும் பள்ளத்தாக்குகளும் மிகுதி; காடுகளும் மிகுதி. அக்காடுகளில் பருத்த மரங்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. அக்காடுகளை அடுத்துச் சிற்றூர்களை அமைத்துக்கொண்டு வேட்டுவர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் வேட்டை நாய்களை வளர்த்து வந்தனர். அவர்கள் வில்லை வளைத்துக் குறிபார்த்து அம்புகள் எய்வதில் வல்லவர்கள். அவர்கள் காடுகளில் வேட்டையாடி வாழ்ந்தனர். அவர்களுக்குத் தலைவன் ஒருவன் இருந்தான். அவன் மிகுந்த வலிமை உடையவன்; சிறந்த வில் வீரன்; அஞ்சாமை மிக்கவன். அவனது பெயர் **கடிய நெடு வேட்டுவன்** என்பது.

பெருந்தலைச் சாத்தனார் ஒரு முறை கோடை மலைக்குச் சென்றார்; உயர்ந்து விளங்கிய மலைச் சிகரங்களைக் கண்டார்; காண்பவர் அஞ்சி நடுங்கத் தகும் பள்ளத்தாக்குகளைப் பார்த்தார்; வெள்ளி உருகி வழிந்து ஓடுவதுபோல் காணப்பட்ட அருவி களைக் கண்டார். மத்தளம் போன்ற பலாப் பழங் களைக் கொண்ட மரங்களைக் கண்டார். குறிஞ்சி மலர்கள் அவர் கண்களைக் கவர்ந்தன. பலவகை மலர்களின் நறுமணம் அவருக்கு இன்பத்தை உண்டாக்கியது.

சாத்தனார் மலைக் காட்சிகளைப் பார்த்துக் கொண்டே சென்று கோடைமலைத் தலைவனது அரண்மனையை அடைந்தார். அத்தலைவன் பிற

அரசர்களைப் போலவே தமிழ்ச் சுவையை அறிந்தவன்; தமிழ்ப் புலவர்களை வரவேற்கும் பழக்கம் உடையவன். ஆதலால் அப்பெருந்தகை சாத்தனாரை மன மகிழ்ச்சியோடு வரவேற்றான்; அவருக்குத் தேன், தினைமா, பலவகைப் பழங்கள் ஆகியவற்றைக் கொடுத்து உபசரித்தான். புலவர் அவற்றை உண்டு மகிழ்ந்தார். பின்பு அத்தலைவன் அவரோடு இனிமையாகப் பேசினான்.

இவ்வாறு சில நாட்கள் கழிந்தன. அவன் தமக்குப் பரிசு தருவான் என்று புலவர் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தார். தலைவன் பரிசு தரவில்லை. புலவர் உள்ளம் நொந்தார். அவர் அவனை மிக்க வருத்தத்துடன் நோக்கிக் கீழ்வருமாறு கூறினார்:

"கோடைமலைத் தலைவனே, நீ உன்னை அடைக்கலம் என்று வருபவரைக் காப்பவன்; உன்னை எதிர்ப்பவரை அழிப்பவன். உன்னிடம் வாட்போர் புரியும் வீரர் பலர் உளர். வில் போர் புரியும் வீரரும் பலர் உள்ளனர். மான்களையும் காட்டுப் பன்றிகளையும் துரத்திப் பிடிக்கும் வேட்டை நாய்கள் உன்னிடம் உள்ளன. நீ வளமான வாழ்க்கையை உடையவன். ஆயினும் நீ எனக்குப் பரிசு தரவில்லை. சேர சோழ பாண்டியர் மணிமுடி தரித்த மன்னர் ஆவர். அவர்கள் உள்ளன்போடு பரிசு தரவில்லை. ஆயினும் புலவர்களாகிய நாங்கள் அப்பரிசை விரும்போம். நாங்கள் ஏழைகளே; ஆயினும் மான வுணர்ச்சி உடையவர்கள். ஒரு தலைவனை நாடி வரும் புலவன் அவனிடம் பரிசு பெறாமல் வெறுங் கையோடு திரும்புவதில்லை. ஆயினும் உன்னைப் பாடிவந்த யான் வெறுங்கையோடு போகிறேன். வேட்டுவர் தலைவனே, புலவனை அவமதித்த நீ நோயின்றி வாழ்வாயாக."

கோடைமலைத் தலைவன் புலவரது வருத்தத்தை உணர்ந்தான். புலவரின் மன வருத்தம் தனக்குத்

தீங்கு விளைவிக்கும் என்பது அவனுக்குத் தெரியும். ஆதலால் அவன் புலவரைப் பணிந்து, மேலும் சில நாள் அங்குத் தங்கி இருக்கும்படி வேண்டினன்; அவருக்கு வேண்டிய பரிசினைக் கொடுத்து மகிழ்ந் தான். சாத்தனர் அவனை மனங்குளிர வாழ்த்திச் சென்றார்.

இளங்கண்டீரக்கோ

கண்டீரக்கோ என்பவன் தோட்டிமலைத் தலை வன். அவன் சிறந்த கொடையாளி. அவன் தம்பி இளங்கண்டீரக்கோ என்பவன். அவனும் புலவர் களுக்கு நண்பன். சாத்தனர் ஒரு நாள் அவன் மாளிகைக்குச் சென்றார்; இளங்கண்டீரக்கோவைக் கண்டார்; அவன் மலர்ந்த முகத்துடன் புலவரை வரவேற்றான். புலவர் அவனைத் தழுவி மகிழ்ந்தார். அப்பொழுது அவனுக்குப் பக்கத்தில் இளவிச்சிக்கோ என்பவன் அமர்ந்திருந்தான். புலவர் அவனைத் தழுவவில்லை. அதனல் அவன் மன வருத்தம் அடைந்தான்; தன்னைத் தழுவாமைக்குக் காரணம் யாது என்று புலவரைக் கேட்டான். புலவர் அவனை நோக்கிப் பின்வருமாறு கூறினர் :

“ஐயனே, இந்த இளங்கண்டீரக்கோ புலவர் களுக்கு நண்பன்; புலவர்களுக்கு உதவி செய்யும் மனம் உடையவன். ஆதலால் நான் இவனைத் தழுவினேன். நீ நன்னன் பரம்பரையில் வந்தவன். அந்த நன்னனும் புலவர்க்கு நண்பனே. ஆயினும் அவன் பெருந்தவறு ஒன்றைச் செய்தான். அவ னுக்கு ஒரு தோட்டம் இருந்தது. அது மாந் தோட்டம். ஒரு நாள் ஒரு மாங்காய் கீழே விழுந்து வாய்க்கால் நீரில் மிதந்து வந்தது. அவ்வாய்க் காலில் நீராடிக்கொண்டிருந்த பார்ப்பனச் சிறுமி ஒருத்தி அதனை எடுத்து உண்டாள். அதனல் நன்னன் அவளைக் கொல்லத் துணிந்தான். அவள் தந்தை நன்னனைப் பணிந்து தன் மகள் செய்த

குற்றத்தைப் பொறுக்கும்படி வேண்டினுன். நன்னன் மனம் இரங்கவில்லை. அத்தந்தை எண்பத்தொரு யானைகளையும் தன் மகளது நிறையளவு பொன்னுல் செய்யப்பட்ட பாவை ஒன்றையும் தருவதாகக் கூறினுன். நன்னன் அதற்கும் இசையவில்லை; அச்சிறுமியைக் கொன்ருன். இக்கொடுஞ் செயல் தமிழ் நாட்டுப் புலவர்களுக்கு வேதனையை உண்டாக்கியது. தமிழ் நாட்டுப் புலவர்கள் அன்று முதல் அவனையும் அவன் மரபில் வந்தவரையும் நட்புக் கொள்வதில்லை. அதனுல்தான் நான் உன்னைத் தழுவவில்லை.''

இளங்கண்டீரக்கோ புலவர் மனம் மகிழும்படி பரிசுகள் கொடுத்தான். புலவர் அவனை வாழ்த்திக் கொண்டு தம் ஊர் நோக்கிச் சென்ருர்.

**மூவன்**

மூவன் என்பவன் ஒரு சிற்றரசன். சாத்தனுர் ஒரு நாள் அவனைக் காணச் சென்ருர். அவன் புலவரை வரவேற்று உபசரித்தான். புலவர் அவனைப் பாராட்டிச் சிலநாள் அங்குத் தங்கினுர். ஆயினும் மூவன் அவருக்குப் பரிசு தரவில்லை. புலவர் சினம் கொண்டார். அவர் மனம் வேதனைப்பட்டது. அவர் அவனை நோக்கிக் கீழ்வருமாறு கூறினுர்:

"ஐயனே, உனது சிறு நாடு நீர்வளம் மிக்கது. இந்நாட்டில் நீர் நிலைகள் மிகுதி; நன்செய் வயல்கள் மிகுதி. அதனுல் நெற்போர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இந்நாட்டு ஊர்கள் அனைத்தும் மிக்க வளமுடையவை. நீ நற்குணங்கள் பலவற்றை உடையவன் என்று பலர் சொல்லிக் கேட்டேன்; ஆதலால் உன் புகழைப் பாடிக்கொண்டு இங்கு வந்தேன். மன்னனே, உன்னைப் பாடிய நான் வெறுங்கையோடு திரும்பிச் செல்வது உனக்குப் பெருமையைத் தருமா? நீ ஒன்றும் கொடாமையால் நான் வருந்தவில்லை. புலவனை அவமதித்த நீ

நோய் இல்லாமல் வாழவேண்டுமே என்று கவலைப் படுகின்றேன். நீ என்னை அவமதித்தது பிறருக்குத் தெரியாது இருக்கட்டும்.''

இவ்வாறு மனம் வருந்திக் கூறிய புலவர் பெருமான் அவனது அரண்மனையை விட்டு வெளியேறினர்.

புலவரது வருத்தம் வீண் போகவில்லை. சிறிது காலம் கழிந்ததும் அச்சிற்றரசன் சேர வேந்தனுல் கொல்லப்பட்டான். அவனது பல் சேரனது தொண்டி நகரத்து வாயிற் கதவில் பதிக்கப்பட்டது.

# 6. இளங்கோ அடிகள்

## சேர நாடு

திருவாங்கூர் நாடு, கொச்சி நாடு, மலையாளம் மாவட்டம் ஆகிய மூன்றும் சேர்ந்த நிலப்பகுதி கேரள மாகாணம் என்று இப்பொழுது சொல்லப் படுகிறது. இந்த மாகாணமே பழைய காலத்தில் **சேர நாடு** எனப் பெயர் பெற்றது. இந்த நாடு மேற்குத் தொடர்ச்சி மலைக்கும் அரபிக் கடலுக்கும் இடையில் உள்ள குறுகிய நிலப்பகுதியாகும்.

இது மலைவளம் மிகுந்த நாடு; அதனால் மலை நாடு என்றும் சொல்லப்படும். மேற்குத் தொடர்ச்சி மலைகள் இந் நாட்டில் அகன்றும் நீண்டும் அமைந் துள்ளன. மலைப் பகுதிகளில் அடர்ந்த காடுகள் பல உள்ளன. அக்காடுகளில் தேக்கு, அகில், சந்தனம், வேங்கை முதலிய மரங்கள் மிக்குள்ளன. அக்காடு களில் யானை, புலி, கரடி, சிறுத்தை முதலிய விலங்கு கள் வாழ்கின்றன. மிளகுக் கொடிகள் மரங்களைச் சுற்றிப் படர்ந்து அழகிய காட்சியைத் தருகின்றன.

மேற்குத் தொடர்ச்சி மலைகளிலிருந்து காவிரி முதலிய ஆறுகள் கிழக்கு நோக்கிப் பாய்கின்றன. அவ்வாறே அம்மலைத் தொடரிலிருந்து மேற்கு நோக்கிப் பாயும் ஆறுகளும் உண்டு. அவை சேர நாட்டில் பாய்ந்து அரபிக் கடலில் கலக்கின்றன. அந்த ஆறுகளில் மிகப்பெரியது **பேரியாறு** என்பது.

மலைவளம் நிறைந்த சேரநாட்டைப் பழைய காலத்தில் ஆண்டவர் **சேரர்** எனப்பட்டனர். அவர் தலைநகர் **வஞ்சிமாநகரம்** என்பது. அது பெரியாற்றங் கரையில் அமைந்திருந்தது. சேரநாட்டில் துறைமுக

நகரங்கள் சில இருந்தன. அவற்றுள் முசிரி என்பது பெயர் பெற்றதாகும். கப்பல்கள் மேற்கு நாடுகளிலிருந்து பலவகைப் பண்டங்களை ஏற்றிக் கொண்டு சேரநாட்டுத் துறைமுகங்களை அடைந்தன; சேரநாட்டுப் பொருள்களான மயில் தோகை, யானைத் தந்தம், அகிற கட்டைகள், சந்தனக் கட்டைகள், மிளகு முதலியவற்றைத் தம் நாடுகளுக்கு ஏற்றிச் சென்றன. சங்க காலத்தில் சேர நாட்டுக் கடல் வாணிகம் சிறப்பாய் நடைபெற்றது.

### நெடுஞ் சேரலாதன்

சங்க காலத்தில் வாழ்ந்த சேரமன்னர் பலர். அவருள் ஒருவன் **நெடுஞ்சேரலாதன்**. அவன் சிறந்த போர் வீரன்; விற்போரிலும் வாட்போரிலும் வல்லவன். அவன் காலத்தில் கடல் கொள்ளைக்காரர்கள் இருந்தார்கள். அவர்கள் கப்பல்களை வழி மறித்துக் கொள்ளை அடிப்பது வழக்கம். சேரலாதன் அவர்களைக் கடற்போரில் வென்றான்; தன் நாட்டுக்கு வடக்கில் வாழ்ந்த வேறு அரசர்களையும் வென்றான். அம்மன்னனுடைய இரண்டாம் மனைவிக்கு ஆண் மக்கள் இருவர் இருந்தனர். அவருள் மூத்தவன் பெயர் **செங்குட்டுவன்** என்பது. இளையவன் **இளங்கோ** என்று பெயர் பெற்றான்.

### கல்விப் பயிற்சி

செங்குட்டுவனும் இளங்கோவும் தக்க ஆசிரியரிடம் தமிழ்க் கல்வி கற்றனர். அரசருக்கு உரிய யானை ஏற்றம், குதிரை ஏற்றம், விற்போர், வாட்போர், மற்போர், ஈட்டி எறிதல், வேல் எறிதல் முதலிய பயிற்சிகளிலும் நன்கு பழகினர்; அறநூல்களையும் நன்கு கற்றனர்; சேரநாடு முழுமையும் சுற்றினர்; அந்நாட்டு ஆட்சிமுறையை அறிந்தனர்; குடிமக்களின் பலவகைப்பட்ட வாழ்க்கை நிலைகளையும் நேரில் கண்டு உணர்ந்தனர். செங்குட்டுவன்

தந்தையுடன் இருந்து அரசியலில் கருத்தைச் செலுத்தினான். இளங்கோ சமயத்துறையிலும் நூல்களைப் படிப்பதிலும் ஊக்கம் கொண்டான்.

**சோதிடன் கூற்று**

நெடுஞ்சேரலாதன் ஒவ்வொரு நாளும் தனது அரசவையில் இருந்து அரசாங்கச் செய்திகளைக் கவனிப்பது வழக்கம். அவனுக்கு இரு பக்கங்களிலும் செங்குட்டுவனும் இளங்கோவும் அமர்ந்து இருப்பர். அமைச்சர் படைத்தலைவர் முதலிய அரசாங்க அதிகாரிகளும் அங்கு அமர்ந்து இருப்பர். ஒரு நாள் அயல் நாட்டுச் சோதிடன் ஒருவன் மன்னனைப் பார்க்க வந்தான். அரசன் அவனை வரவேற்றான். சோதிடன் நெடுநேரம் அரச மைந்தர் இருவரையும் மாறிமாறிப் பார்த்துக்கொண்டிருந்தான். பின்பு அவன் எழுந்து மன்னனைப் பணிந்து பின்வருமாறு கூறினான்: "அரசர் பெருமானே, உம்முடைய மைந்தர் இருவரும் நல்ல உடற்கட்டு உடையவர்; சிறந்த எதிர் காலத்தையும் உடையவர். இவ்விருவருள் இளைய மைந்தரிடமே அரசர் ஆவதற்கு உரிய இலக்கணங்கள் நன்கு அமைந்துள்ளன."

சோதிடன் கூறியதைக் கேட்ட வேந்தன் திடுக்கிட்டான். செங்குட்டுவன் முகம் வாடிவிட்டது. அமைச்சர் முதலியோர் ஒன்றும் தோன்றாது விழித்தனர். இளங்கோ மிக்க சீற்றம் கொண்டான். அவன் சோதிடனைப்பார்த்து, "சோதிடரே, என்னிடம் அரசனுக்கு உரிய இலக்கணங்கள் இருக்கலாம். ஆயினும் தந்தைக்குப் பின்பு மூத்த மகன் அரசன் ஆவதே இந்த நாட்டு வழக்கம். இந்த வழக்கத்திற்கு மாறாக இங்கு யாரும் நடவார். மூத்தவன் நல்ல நிலையில் இருக்கும்பொழுது இளையவன் பட்டம் பெறின் நாட்டார் நகைப்பர். என் தமையன் எல்லாத் துறைகளிலும் என்னை விடச் சிறந்தவன்.

எனக்கு ஆட்சியில் விருப்பம் இல்லை," என்று கூறினான்.

சோதிடன் இளங்கோவைப் பார்த்து, "இளவரசே, நான் சோதிடன்; இக்கலையில் வல்லவன் என்று பெயர் எடுத்தவன். நான் நீண்ட நேரம் உங்கள் இருவரையும் உற்றுப் பார்த்த பின்பு தான் இந்த முடிவுக்கு வந்தேன்; என் முடிவை இந்த அவையில் வெளிப்படையாகக் கூறினேன். உம்முடைய தமையனார் அரசியல் அறிவில் தேர்ந்த வராக இருக்கலாம். ஆயினும் உங்கள் தந்தை யாருக்குப் பின்பு நீரே அரசராவதற்கு உரிய இலக் கணம் உம்மிடம் பொருந்தியிருக்கிறது. என் சோதிடம் பொய்யாது," என்று பணிவுடன் கூறினான்.

## இளங்கோ அடிகள்

இளங்கோவின் சீற்றம் எல்லை கடந்தது. மன்னன் மனம் குழம்பினான். செங்குட்டுவன் மனச் சோர்வு அடைந்தான். அரசாங்க அதிகாரிகள் எழுதப்பட்ட ஓவியங்கள் போல அசைவு இல்லாமல் இருந்தனர். இளங்கோ தன் இருக்கையைவிட்டு எழுந்தான்; சோதிடனை உற்று நோக்கினான்; கல கலவென்று நகைத்தான்; "நுண்ணறவு இல்லாத சோதிடரே, என் தந்தையாருக்குப் பின்பு நடை பெறப்போகும் ஒன்றைப் பற்றித்தானே இப் பொழுது சொன்னீர். நான் அரச மைந்தன் உடை யுடன் இருப்பேனாயின், எதிர்காலத்தில் எவரேனும் என் மனத்தை மாற்றினும் மாற்றலாம். அப் பொழுது நான் அரசன் ஆவதற்கு வாய்ப்புக் கிடைப் பினும் கிடைக்கலாம். அந்த நிகழ்ச்சிகளுக்கெல் லாம் நான் இடம் தரப்போவதில்லை. நான் இப் பொழுதே அரச மகன் என்னும் உரிமையைத் துறக் கின்றேன். நான் இந்த வினாடி முதல் ஒரு துறவி.

நான் துறவை மனம் உவந்து ஏற்றுக்கொண்டேன். இப்பொழுது உமது சோதிடம் பலிக்குமா?'' என்று கேட்டான்.

மைந்தனது எதிர்பாராத உரையைக் கேட்ட தந்தை தன் மகனைத் தழுவி, ''மகனே, சோதிடன் பேச்சைக் கேட்டுத் தவறு செய்யாதே'' என்று அலறினன். செங்குட்டுவனும் அதனையே கூறினன். இளங்கோ அவ்விருவரையும் பணிந்தான். அவன் தன் தந்தையை நோக்கி, ''ஐயனே, எனது முடிவே ஒழுங்கானது. என் மனம் அரசியலை நாடவில்லை. நான் தமிழ் நூல்களைப் படிப்பதிலும் சமய நூல் களைப் படிப்பதிலும் பேரின்பத்தைக் காண்கிறேன். துறவே என் மனநிலைக்கு ஏற்றது. நான் துறவி களோடு காலங்கழிப்பதையே விரும்புகிறேன். எனது இந்த முடிவுக்கு உங்கள் ஆசி தேவை,'' என்று கூறித் தந்தையைப் பணிந்தான்.

செங்குட்டுவன் கண்ணீர் வடித்துக்கொண்டே தன் தம்பியைத் தழுவிக்கொண்டான். அவன், ''தம்பி, நீ எனக்காகத் துறவி ஆவது முறையன்று'' என்று மொழிந்தான். இளங்கோ அவன் கண் ணீரைத் துடைத்து அன்புடன் நோக்கினன்; ''அண்ணு, நான் உனக்காகத் துறவி ஆகவில்லை. துறவி ஆகவேண்டும் என்பது எனது நீண்ட நாள் விருப்பம். அவ்விருப்பம் இச்சோதிடரால் நிறை வேறியது. இதுவே உண்மை. நான் உன்னைவிட்டு வேறு ஊருக்குப் போகேன்; இந்த ஊரிலேயே ஒரு மடத்தில் தங்கி இருப்பேன்; நாம் அவ்வப்போது சந்திக்கலாம்,'' என்று மொழிந்தான்.

அக்காலத்தில் சைவம், வைணவம், பௌத்தம், சமணம் முதலிய சமயங்கள் பல தமிழ் நாட்டில் இருந்தன. ஒவ்வொரு சமயத்தைச் சேர்ந்த துறவி களும் தத்தம் மடங்களில் வாழ்ந்தனர். இளங்கோ சமண சமயத் துறவியாஞன்; அதனல் அன்று முதல்

இளங்கோ அடிகள் என மக்களால் அழைக்கப்பட்டான்.

இளங்கோ அடிகள் அன்று முதல் துறவி வாழ்க்கையை மேற்கொண்டார். ஆயினும் அவர் அடிக்கடி அரண்மனைக்கு வந்து தம் பெற்றோரையும் தமையனையும் சந்தித்துப் பேசி மகிழ்ந்தார். அவர் சமண சமயத் துறவிகளோடு சேர்ந்து அச்சமய நூல்களை ஆழ்ந்து படித்தார்; ஒழுக்கத்தில் சிறந்து விளங்கினார்.

**அரசன் செங்குட்டுவன்**

ஆண்டுகள் சில கழிந்தன. நெடுஞ்சேரலாதன் காலமானான். அதனால் அவன் மனைவியான நற்சோணை என்பவள் உயிர் விட்டாள். செங்குட்டுவன் சேரமன்னன் ஆனான்; கணவனுடன் உயிர்விட்ட தன் தாய்க்குக் கோயில் கட்ட விரும்பினான்; தன் தாயின் உருவம் பொறிக்கப்பெற்ற கல்லைக் கங்கையில் நீராட்டச் சென்றான். பெரும் படை ஒன்று அவனுடன் சென்றது. வடநாட்டு மன்னர் அவன் வருகையைத் தவறாக எண்ணித் தாக்கினர். செங்குட்டுவன் அவர்களை வென்றான்; கல்லைக் கங்கையாற்றில் நீராட்டிக் கொண்டுவந்தான்; தன் தாய்க்குக் கோவில் அமைத்தான்.

செங்குட்டுவன் கொங்கர், கருநாடர், கங்கர் முதலிய அரசரை வென்றான்; தன் மைத்துனச் சோழனைச் சோழமன்னன் ஆக்கினான்; சிற்றரசர் பலரை வென்று பேரரசனாய் விளங்கினான். அவன் மனைவி இளங்கோ வேண்மாள் என்பவள். அவள் கல்வி அறிவும் அரசியல் அறிவும் பெற்றவள். செங்குட்டுவன் மகன் குட்டுவன் சேரல் என்பவன்.

செங்குட்டுவன் சிறந்த சிவ பக்தன். அவன் தம்பியாரான இளங்கோ அடிகள் சமண சமயத்தவர். சாத்தனார் என்பவர் அவ்விருவருக்கும்

நண்பர். அவர் மதுரையில் நெல், கேழ்வரகு, கம்பு, சோளம் முதலிய கூலக்கடை வைத்து நடத்தினர். அவர் பௌத்த சமயத்தினர். ஆயினும் அம் மூவரும் மனம் கலந்து பழகினர்; ஒருவரை ஒருவர் மதித்தனர்.

### பெரியாற்றங்கரையில்

செங்குட்டுவன் ஒருநாள் தன் மனைவியுடனும் தம்பியாரான இளங்கோ அடிகளுடனும் மலைவளம் காணச் சென்ருன்; அமைச்சர், படைத்தலைவர், மெய்காப்பாளர் முதலியோரும் மன்னனுடன்



சென்றனர். மலைச்சாரலை அடுத்துப் பெரியாறு பாய்ந்துகொண்டிருந்தது. அது அகன்ற ஆறு. செங்குட்டுவன் அதன் கரையில் ஓர் இடத்தில் தங்கினன்; மிக்க உயரமான மலைகளையும், அவற்றி லிருந்து கீழ் நோக்கிப் பாய்ந்த அருவிகளையும் கண் டான். அம்மலைகளில் மக்கள் வாழ்ந்தனர். மலை

நாட்டுப் பெண்கள் பாடிக்கொண்டே குரவைக் கூத்து ஆடுவது வழக்கம். தினைப்புனம் காக்கும் பெண்கள் பாடுவர். தினையைக் குத்தும் பெண்கள் உலக்கைப் பாட்டைப் பாடுவர். தேன் எடுக்கும் குறவர் ஆரவாரம் செய்வர் புலியால் தாக்கப்படும் யானை பிளிறும். பயிர்களைக் காப்பவன் அப் பயிர் களை அழிக்கவரும் விலங்குகளைப் பெருதத ஓசை யிட்டு விரட்டுவான். காட்டு யானைகளைப் பிடிப் பவர் ஆரவாரம் செய்வர். செங்குட்டுவனுக்கும் அவன் உடன் சென்றோர்க்கும் இப்பலவகை ஓசை களும் கேட்டன.

தங்கள் மலைநாட்டு மன்னன் ஆற்று மணலில் தங்கி இருக்கிறான் என்பதைக் குறவர் அறிந்தனர். அவர்கள் தங்கள் மன்னனைக் காண விரும்பினர்; யானைத் தந்தம், அகிற் கட்டைகள், சந்தனக் கட்டைகள், தேன் குடங்கள், மான் மயிராலான விசிறிகள், மிளகுக் கொடிகள், தேங்காய்கள், இனிய மாம்பழங்கள், பலாப்பழங்கள், பலவகைப் பூங்கொடிகள், வாழைத்தாறுகள், யானைக்கன்று, புலிக் குட்டி, குரங்குக் குட்டி, கரடிக் குட்டி, கஸ்தூரிக் குட்டி, கீரிப்பிள்ளை, மயில், காட்டுக் கோழிகள், கிளிகள் முதலியவற்றை எடுத்துச் சென்று மன்னன் முன்பு வைத்துப் பணிந்தனர்.

### வியப்பு ஊட்டும் செய்தி

செங்குட்டுவன் மலைநாட்டு மக்களின் தலை வனைப் பார்த்து நலம் விசாரித்தான்; "நீங்கள் என்னிடம் சிறப்பாகச் சொல்ல வேண்டும் செய்தி ஏதேனும் உள்ளதோ?" என்று கேட்டான். அத் தலைவன் பணிந்து பின்வருமாறு கூறினான்: "அரசே, நாங்கள் சில நாட்களுக்கு முன்பு ஓர் அரிய காட்சியைக் கண்டோம். அழகிய மங்கை ஒருத்தி எங்கள் மலைக்கு வந்தாள்; ஒரு வேங்கை மரத்தடியில் நின்றாள்; மிகுந்த கவலை கொண்டவள்

போலக் காணப்பட்டாள். அவள் கணவனை இழந்தவள். அவள் அங்கு நின்றபொழுது விமானம் ஒன்று வந்து இறங்கியது. அவள் அந்த விமானத்தில் ஏறிக்கொண்டாள். அது வான வழியில் சென்றது. அவள் எந்த நாட்டைச் சேர்ந்தவள் என்பது தெரியவில்லை.''

சாத்தனார் விளக்கம்

மலைநாட்டுத் தலைவன் கூறிய செய்தியைக் கேட்டுச் சேரனும் பிறரும் வியப்பு அடைந்தனர். அப்பொழுது அங்கு இருந்த மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் புன்முறுவலோடு கீழ்வருமாறு கூறினார் :

''சேரர் பெருமானே, உனது நாட்டுக்கு வந்து மேல் உலகம் சென்றவள் கண்ணகி என்பவள். அவள் சோழ நாட்டைச் சேர்ந்தவள்; செல்வ வணிகன் மகள். அவள் கணவன் பெயர் கோவலன் என்பது. அவனும் செல்வ வணிகன் மகன். அவன் மாதவி என்னும் நடனமாதோடு வாழ்ந்தான்; செல்வத்தை இழந்தான்; இறுதியில் மதுரையில் தன் மனைவியின் சிலம்பை விற்று வரும் பொருளைக் கொண்டு வாணிகம் செய்ய விரும்பினான்; இந்த எண்ணம் கொண்டு தன் மனைவியோடு மதுரையை அடைந்தான்; அரண்மனைப் பொற்கொல்லரிடம் தன் மனைவியின் சிலம்பைக் காட்டினான். அப் பொற்கொல்லன், முன்பே, பாண்டிமாதேவியின் சிலம்பு ஒன்றைக் கவர்ந்தவன்; அதனைக் கள்வன் எடுத்துச் சென்றுவிட்டதாக அரசனிடம் கூறியிருந்தான். அக்கொடியவன், கோவலன்தான் அக்கள்வன் என்று பாண்டியனிடம் கூறினான். பாண்டியன் உண்மையை ஆராயத் தவறிவிட்டான்; கோவலனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வருமாறு தன் ஆட்களுக்கு ஆணையிட்டான். மன்னன் ஆணைப்படி குற்றமற்ற கோவலன் கொல்லப்பட்டான்.

“நடந்ததை உணர்ந்த கண்ணகி தனது மற்றொரு சிலம்புடன் மதுரைத் தெருக்களில் நடந்து புலம்பினாள்; வெட்டுண்ட தன் கணவன் உடலைத் தழுவினாள்; பாண்டியனிடம் தன் வழக்கை எடுத்துரைத்தாள். கண்ணகியின் சிலம்பில் மாணிக்கக் கற்கள் இருந்தன. பாண்டிமாதேவியின் சிலம்பில் முத்துக்கள் இருந்தன. பாண்டியன் இந்த உண்மையை உணர்ந்தான்; நடுங்கினான்; தான் முறை தவறி நடந்ததை எண்ணி மயங்கி வீழ்ந்தான். அவன் உயிர் பிரிந்துவிட்டது. அரச மாதேவியும் உடனே உயிர்விட்டாள். கண்ணகி தன் கற்பின் சிறப்பால் மதுரையைச் சபித்தாள். அதனால் உடனே தீ மதுரையின் பல பகுதிகளை அழித்துவிட்டது அக்கற்புடைய பெண்மணியே உனது நாட்டிற்கு வந்தவள். அவள் குற்ற மற்றவள்; ஆதலால் தேவர்கள் வரவேற்க மேல் உலகம் சென்றாள்.”

### கண்ணகிக்குக் கோயில்

கண்ணகியின் வரலாற்றைக்கேட்ட செங்குட்டுவன் மிக்க கவலை கொண்டான்; “நாட்டில் மழை பெய்யாவிட்டால் குடிகள் அரசாட்சியையே குறை கூறுவர்; ஓர் உயிர் கொல்லப்பட்டாலும் ஆட்சியின்மீதே குறைகூறுவர். அரசாட்சி புரிவது துன்பம் நிறைந்த செயலாகும்,” என்றான். பின்பு அவன்தன் மனைவியைநோக்கி, “பாண்டியன்இறந்தவுடன் அவன் மனைவி உயிர் விட்டாள். கண்ணகி நம் நாட்டுக்கு வந்து மறைந்தாள். இவ்விருவரில் உயர்ந்தவர் யார்?” என்று கேட்டான். சேர மாதேவி, “அப்பெண்மணிகள் இருவரும் சிறந்தவரே ஆவர். ஆயினும் நம் நாட்டுக்கு வந்து மேல் உலகம் சென்ற பத்தினியை நாம் வழிபடுதல் நல்லது,” என்று கூறினாள்.

மன்னன் அதற்கு உடன்பட்டான்; பத்தினியின் உருவத்தைப் பொறிக்கத் தகும் கல்லை இமயத்திலிருந்து கொண்டுவர விரும்பினன்; அதனல் ஒரு பெரும் படையுடன் வடக்கு நோக்கிச் சென்முன்; தனக்கு வேண்டிய அரசர்களின் உதவியால் பல படகுகளைக் கொண்டு கங்கை ஆற்றைக் கடந்தான்; அங்குத் தன்னை எதிர்த்த ஆரிய அரசர் பலரை வென்முன்; தான் தேர்ந்தெடுத்த கல்லைக் கங்கையில் நீராட்டுவித்தான்; அதனைத் தோற்ற அரசரின் தலைகள்மீது வைத்து வஞ்சி மாநகரத்திற்குக் கொண்டுவந்தான்.

அவன் கொண்டுவந்த கல்லில் பத்தினியின் உருவம் பொறிக்கப்பட்டது. அவ்வுருவச்சிலை புதிய கோவிலில் நிறுத்தப்பட்டது. நல்ல நாளில் அதற்கு வழிபாடு நடைபெற்றது. அப்பொழுது இலங்கைக் கயவாகு வேந்தன் முதலிய அரசர் பலர் அங்கு வந்திருந்தனர். வழிபாடு சிறப்பாக நடைபெற்றது. கண்ணகித் தெய்வம் வானத்தில் தோன்றி மன்னவனையும் மற்றவரையும் வாழ்த்தியது.

சிலப்பதிகாரம்

இளங்கோ அடிகள் கண்ணகியின் வரலாற்றை நன்கு ஆராய்ந்தார்; அதனை ஒரு பெருங்காவியமாகப் பாடினர். காவியம் ,என்பது ஒருவரைப் பற்றிய தொடர் கதையாகும். சிலம்பினல் கண்ணகியின் வரலாறு விரிவடைந்தது; சிறப்பும் அடைந்தது. அதனல் அவள் வரலாறு சிலப்பதிகாரம் என்று பெயர் பெற்றது. இந்த வரலாற்றின் ஒரு பகுதி சோழ நாட்டுத் துறைமுகப் பட்டினமான புகார் நகரில் நடைபெற்றது. இரண்டாம் பகுதி பாண்டிய நாட்டு மதுரையில் நடைபெற்றது. மூன்றும் பகுதி சேரநாட்டு வஞ்சியில் நிகழ்ந்தது. ஆதலால் இளங்கோ அடிகள் தாம் பாடிய நூலை மூன்று பிரிவுகளாகப்பிரித்தார்; ஒவ்வொரு பிரிவுக்கும் காண்டம்

எனப் பெயர் கொடுத்தார். அவை முறையே புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக் காண்டம் என்பன. ஒவ்வொரு காண்டத்திலும் உட்பிரிவுகள் பல உண்டு. ஒவ்வொரு பிரிவும் ஒரு காதை எனப்படும். சிலப்பதிகாரம் முப்பது காதை களை உடையது.

**சிலப்பதிகாரம்** சேர, சோழ, பாண்டிய நாடு களைப் பற்றிய விவரங்களைக் கூறுவது; வேட்டுவர், ஆயர், குறவர் வழிபாட்டு முறைகளையும் பிறவற் றையும் தெரிவிப்பது; அக்காலத் தமிழகத்தில் மக்கள் வாழ்க்கை, அரசியல் முறை, சமுதாய அமைப்பு, சமயங்களின் நிலை முதலியவற்றையும் தெளிவாக எடுத்துக்கூற வல்லது. அந்நூலில் இத்தகைய சிறப்புக்கள் அமைந்திருப்பதால்தான் கவியரசர் பாரதியார் அதனை, 'நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்' என்று உளம் மகிழ்ந்து பாராட்டினார். நீங்கள் மேல் வகுப்புக்களில் அந் நூலைப் படித்து மகிழ்வீர்களாக!

## கட்டுரைப் பயிற்சி

கீழ்வரும் ஒவ்வொரு பொருள் பற்றியும் முப்பது வரிகளுக்கு மிகாமல் கட்டுரை ஒன்று வரைக.

1. (1) பாண்டிய நாடு.
   (2) பிசிராந்தையாரின் பழகாத நட்பின் சிறப்பு.
   (3) கோப்பெருஞ்சோழனின் நற்பண்புகள்.
2. (1) போரைத் தடுத்த கோவூர்கிழார்.
   (2) கோவூர்கிழாரும் ஆவூர் முற்றுகையும்.
   (3) கோவூர்கிழாரும் கிள்ளிவளவனும்.
   (4) கோவூர்கிழார் இயல்புகள்.
3. (1) ஔவையாரும் அதியமானும்.
   (2) ஔவையாரும் தொண்டைமானும்.
   (3) ஔவையார் இயல்புகள்.
4. (1) பெருஞ்சித்திரனாரின் வறுமை நிலை.
   (2) பெருஞ்சித்திரனாரும் குமணனும்.
   (3) பெருஞ்சித்திரனாரும் இளவெளிமானும்.
   (4) பெருஞ்சித்திரனார் இயல்புகள்.
5. (1) பெருந்தலைச் சாத்தனாரும் குமணனும்.
   (2) பெருந்தலைச் சாத்தனாரும் கோடைமலைத் தலைவனும்.
   (3) பெருந்தலைச் சாத்தனாரும் இளங்கண்டீரக்கோவும்.
   (4) பெருந்தலைச் சாத்தனாரின் இயல்புகள்.
6. (1) இளங்கோ துறவியான வரலாறு.
   (2) பெரியாற்றங்கரை நிகழ்ச்சிகள்.
   (3) செங்குட்டுவனும் பத்தினிக் கடவுளும்.
   (4) செங்குட்டுவன் இயல்புகள்.
7. இளங்கோ அடிகளும் சிலப்பதிகாரமும்.
8. இந்நூலில் இடம் பெற்றுள்ள புலவர்களின் இயல்புகளை வெளிப்படுத்துக.
9. இந்நூலில் கூறப்பெற்றுள்ள அரசர்களின் இயல்புகளை விளக்கி வரைக.
10. நீங்கள் இந்நூற் படிப்பினால் பழைய தமிழகம் பற்றி அறியத் தகும் செய்திகள் யாவை ?

---